## நாம் இப்பொழுது விலைவாசி உயர்வை எதிர்த்து நடத்தும் போரில் வெற்றியடைவோம்

தேவைக்குத் தகுந்தபடி
பண்டங்கள் கிடைக்காததாலேயே,
விலைகள் முக்கியமாக உயருகின்றன.

இந்த விலைகள் உயருவதைத் தடுக்க, ஒவ்வொருவரும் உதவி செய்யக்கூடும்:

அவசியமானபோது மட்டும் செலவழித்தும், மற்றும் தன்னால் எவ்வளவு சேமிப்புச் செய்ய முடியுமோ, அதை பாங்க் ஆப் இந்தியா மூலம் சேமிப்புச் செய்தும் உதவலாம்.

இந்த சேமிப்பு நிதிகளை, பாங்க் ஆப் இந்தியா, ஒருங்கே சேர்த்து தொழில் உற்பத்திக்கு நிதி உதவி செய்கிறது: அதன் மூலம் அத்தியாவசியப் பண்டங்களின் உற்பத்தி அதிகரிக்கிறது

பாங்க் ஆப் இந்தியாவில், நீங்கள் சேமிப்பு செய்யும் பணம், உங்களுக்கு வட்டி கிடைக்க வழி செய்வதோடு, தேச நலத்திற்கும்கூட உதவுகிறது.

பாங்க் ஆப் இந்தியா மூலம் சேமிப்பு செய்யும் பழக்கத்தை ஆரம்பியுங்கள்.

# பாங்க் ஆப் இந்தியா



# வீர சுதந்திரம் வேண்டி நின்றார்
# விடுதலைப் போரில் வெற்றி கண்டார்
# சீருடன் பாரதம் சிறந்து விளங்கிட
# காண்போம் நாமும்
# புரட்சியின் வெற்றி





davp 72/129



1. இளம்பிள்ளைவாதம்
2. முகம், கழுத்து, இடுப்பு, கை, கால்களில் பாரிசவாயு பக்கவாதம்.
3. தசைத் தேய்தல்
4. மனோவளர்ச்சித் தடைகள்
5. காது, கண் பேச்சுக் குறைகள்
6. இடுப்புவலி, முடக்குவாதம், கீல்வாதம்

மேற்கண்ட உபாதைகளால் அவதியுறும் நோயாளிகள், கீழ்க்கண்ட விலாசத்தில் எமது பிரதம வைத்தியரை (M. A., பிஷகாச்சார்ய தன்வந்த்ரி, டெல்லியிலும், மகாராஷ்டிரம் Fart I,லும் ரிஜிஸ்டர் செய்யப்பட்டுள்ளது) கண்டு ஆலோசனை பெறலாம் : ஆர்யவர்த்த போலியோ ஆஸ்ரம், புது தில்லி.

| | | | |
|---|---|---|---|
| சென்னை : | 16-8-72 | 8 to 12a.m. 2to4 p.m. | உட்லண்ட்ஸ் ஹோட்டல், 1/23, எட்வர்ட் எல்லியட்ஸ் சாலை, மயிலாப்பூர். போன் : 83111 |
| திருச்சி : | 17-8-72 | 8 to 12a.m. 2to3 p.m. | ஹோட்டல் அஜந்தா, ஜங்ஷன் ரோடு. போன்: 4501 |
| மதுரை : | 18-8-72 | 8 to 12a.m. 2to3 p.m. | நியூ காலேஜ் ஹவுஸ், 2, டவுன்ஹால் ரோடு. போன் : 24311 |
| திருவனந்தபுரம் : | 19-8-72 | 10 a.m. to 3 p.m. | ஹோட்டல் அரிஸ்டோ, சென்ட்ரல் ஸ்டேஷன் அருகாமையில். போன் : 2600 |
| மங்களூர் : | 24-8-72 | 10 a.m. to 3 p.m. | உட்லண்ட்ஸ் ஹோட்டல், ஜோதி தியேட்டர் ரோடு போன் : 4411 |
| கோயமுத்தூர் : | 25-8-72 | 9 to 12a.m. 2to3 p.m. | உட்லண்ட்ஸ் ஹோட்டல்: காலேஜ் ரோடு. போன்: 22462 |
| பெங்களூர் : | 26-8-72 | 9 to 12a.m. 1to3 p.m. | சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டல், 5, சம்பங்கி டாங்க் ரோடு, போன் : 74111 |
| ஹுப்ளி : | 27-8-72 | 10 a.m. to 2 p.m | அசோகா ஹோட்டல், லாமிங்டன் ரோடு. போன்: 1205 |
| பம்பாய் : | 31-8-72 / 1-9-72 | 8to12a.m. 2to4 p.m. | ரூம் நெ. 1, முதல் மாடி, பில்டிங் நெ. 3, நவ்ஜீவன் காலனி, லாமிங்டன் ரோடு. |
| கல்கத்தா : | 5-10-72 | 8 to 12a.m. 1to3 p.m. | பிராட்வே ஹோட்டல், P. 34, மிஷன்ரோ. போன் : 234219 |

ஆலோசனைக் கட்டணம் : ரூ. 32/- சிகிச்சைக் கட்டணம் தனி

# ARYAVARTA POLIO ASHRAM

ARYAVARTA BHAWAN

## 79-E, Kirti Nagar, New Delhi-15

Phone : 584344; 585635; 624924 - Gram : "POLIOCURE"

கிளைகள் : 95, யஷ்வந்த் பிளேஸ், சாணக்யபுரி, புது தில்லி - 21. போன் : 624924
பம்பாய் : ரூம் நெ. 1; முதல் மாடி, 3, நவ்ஜீவன் காலனி, லாமிங்டன் ரோடு, பம்பாய் - 8

போலியோ மைலிடிஸ் & ஆயுர்வேத சிகிச்சைகள் பற்றிய படங்களுடன் கூடிய புத்தகம் கவிராஜ் ஓம்பிரகாஷ் M. A., பிஷகாச்சார்யா தன்வந்த்ரி அவர்களால் எழுதப்பெற்றது.

ஆங்கிலம் : விலை ரூ. 8.50; ஹிந்தி : விலை ரூ. 8.00; போலியோ & மியோபதி ரூ. 1; ஆரோக்கியம் 2.50

ஆலோசனைகள் ஆங்கிலத்திலும் ஹிந்தியிலும் கூறப்படும்.

# சுதந்திரத்தின் பல பரிமாணங்கள்




'பிஇஎல்'லின் பலதரப்பட்ட பணிகள் சுதந்திரத்தின் ஆழ்ந்த பரிமாணங்களைப் பிரதிபலிக்கிறது.

பல்வகை உற்பத்தி இதற்கோர் உதாரணம். 'பிஇஎல்' 16 ஆண்டுகளுக்கு முன்னர் துவக்கப்பட்டபோது இரண்டே இரண்டு பொருட்கள் மட்டுமே உற்பத்தியாகின. இன்றோ, 250க்கும் மேற்பட்ட பொருட்களைத் தயாரித்து, காவல்துறை, விமான இயல், ரெயில்வே, டெலிவிஷன், ஒலிபரப்பு, தொழில், வைத்தியம் இப்படியாக அநேகமாக ஒவ்வொரு துறையிலும் 'எலக்ட்ரானிக்ஸ்' சாதனங்களில் நமது தேவைகளை 'பிஇஎல்' பூர்த்தி செய்கிறது.

சுயதேவைப் பூர்த்தியிலும்தான்! காவல்துறைக்குத் தேவையான கம்பியில்லாச் செய்தித் தொடர்புச் சாதனங்களில் எவ்வளவோ வகைகளை 'பிஇஎல்' சுயமாக வடிவமைத்து தயாரித்துள்ளது. அதுமட்டுமல்ல. பாதுகாப்புத் துறையினர் விதிக்கும் கடுமையான அளவு முறைகளுக்கு ஏற்ப உறுதியான, நம்பகமான செய்தித் தொடர்புச் சாதனங்கள், மிக உயர்ந்த தொழில் தரத்துடன் கூடிய ஒலிபரப்பு, ஒலிபரப்பு ஸ்டுடியோ சாதனங்கள் மற்றும் பலவகைப்பட்ட 'எலக்ட்ரானிக்ஸ்' சிறுதுணை உறுப்புகள் ஆகியவைகளை 'பிஇஎல்' தயாரிக்கிறது.

மேலும் வெகுவில் முன்னேறிவரும் 'எலக்ட்ரானிக்ஸ்'ஸின் தொழில் நுணுக்கங்களைச் செயல்படுத்தி நம் பாரதத்தின் கோடிக்கணக்கான மக்களின் உபயோகத்திற்கு அளிக்க 'பிஇஎல்' சேவை செய்கிறது.

**பிஇஎல் ஒவ்வொரு நாளும் பலவழிகளில் உங்களுக்கு நல்ல நல்ல முறையிலே பணி புரிகிறது.**




## பாரத் எலக்ட்ரானிக்ஸ் லிட்.

பதிவு அலுவலகம்: ஜாலஹள்ளி, பெங்களூர்-13.

# கல்கி

## சுதந்திர தின வெள்ளிவிழாச் சிறப்பிதழ்





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## பொருளடக்கம்

பரிதாபி, ஆடி. 29 — ஆகஸ்டு 13, 1972


| | | |
|---|---|---|
| வெள்ளிவிழா (தலையங்கம்) | — | 9 |
| தமிழ் நாட்டிலே... | — | 11 |
| சுதந்திரதினச் சிந்தனைகள் | — | 15 |
| அரசியலில் அரவிந்தரின் அரும்பணி | | 19 |
| ராஜாஜியின் ஜெயில் டைரி | — | 22 |
| அன்வர் எழுதுகிறான் ! | — | 24 |
| அத்வைதமும் அணு விஞ்ஞானமும் | | 25 |
| அலை ஓசை | — | 27 |
| கூட்டுக் குடும்பம் | — | 36 |
| அன்பே அகிலா | — | 46 |
| சத்திய வெள்ளம் | — | 49 |
| சுதந்திரச் சிற்பிகள் (படங்கள்) | — | 62 |
| லைக்கோ ஸாரநாதன் | — | 65 |
| சுதந்திர பாரதம் (படங்கள்) | — | 78 |
| அருள் வேட்டல் | — | 80 |
| ஒரு சாம்ராஜ்யத்தின் அஸ்தமனம் | | 82 |

LONG LIFE! LONG LASTING!

# Go now for the battery with the L-O-N-G-E-S-T GUARANTEE—

## the best money can buy

16 months for cars





CALTEX (INDIA) LIMITED

Grant.34.

கல்கி

மலர் 32
இதழ் 2



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

— பாரதியார்

# வெள்ளி விழா

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் மிகப் பாடுபட்டு நமது ஒப்பற்ற தலைவர்கள் மகாத்மா காந்தியும், சர்தார் பட்டேலும், ஜவாஹர்லால் நேருவும், ராஜாஜியும் மற்ற தீரர்களும் வாங்கிக் கொடுத்த விலையில்லாச் சுதந்திரத்தை இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நாம் எப்படி அனுபவித்திருக்கிறோம், எப்படிப் பாதுகாத்து வந்திருக்கிறோம் என்பதை வெள்ளி விழா சமயத்தில் எண்ணிப் பார்க்க வேண்டியது அவசியம். சுதந்திர பாரதத்துக்கென அறிஞர்கள் அமைத்துத் தந்த அற்புத அரசியல் சாஸனம் என்னவாயிற்று என்பதையும் கவனிக்க வேண்டும்.

திட்டங்கள் தீட்டினோம். 65,000 கோடி ரூபாய் செலவழித்தோம். ஏழை நாடு இந்தியா. இவ்வளவு பெரிய தொகையைத் திரட்டிச் செலவழித்ததே ஆச்சரியம். என்ன பலன் கண்டோம்? தொழில்கள் படிப்படியாகச் சர்க்கார் துறையில் வளர்ந்தன. உற்பத்தித் தொழில், அதன்பின் வியாபாரத் தொழில், பின் வங்கித் தொழில், பிற்பாடு இன்ஷ்யூரன்ஸ் தொழில் — எல்லாம், கொஞ்சம் கொஞ்சமாக அரசாங்கத்திடம் ஏகபோகமாகக் குவிந்துவிட்டன. குவியத்தான் குவிந்ததே, மக்களுக்குப் பலன் கிட்டியதா என்றால் இல்லை. உற்பத்திக் குறைவு, நஷ்டத்தில் இயங்குதல், வேலைநிறுத்தங்கள், தொழில் அமைதி குலைவு, திறமையில்லா நிர்வாகம். தனியார் துறையிலோ, பொருள்களுக்குத் தட்டுப்பாடு, எடுத்ததற்கெல்லாம் அரசாங்கத்தின் உத்தரவை எதிர்பார்த்தே செயல்பட வேண்டிய நிலைமை, பெர்மிட், கண்ட்ரோல், லைசென்ஸ்கள், விலைக் கட்டுப்பாடுகள், விநியோகக் கட்டுப்பாடுகள். — இப்படிப் பொருளாதாரத்தை எவ்வித சுதந்திரமுமின்றிக் கட்டிப்போட்ட நிலை. எங்கு கண்டாலும் வேலையில்லாத் திண்டாட்டம்.

வரிச்சுமையின் பளு எத்தனை மடங்கு உயர்ந்திருக்கிறது இந்த இருபத்தைந்து ஆண்டு காலத்தில்? இவ்வளவையும் முணுமுணுத்துக் கொண்டே கொடுத்து வருகிறோம்.

அரசாங்கத்தின் செலவுகள் உயராத துறை இல்லை. அதிகார வர்க்கத்தினர் விஸ்தரிக்காத பகுதி இல்லை. சோஷலிஸம் பேசிப் பணம் படைத்தவர்கள் மீது துவேஷத்தை வளர்த்துவரும் அதே சமயம் புதிய பணக்கார வர்க்கம் ஒன்று தலையெடுத்து நாட்டையே தன் பிடியில் வைத்துக் கொண்டிருக்கிறது.

எந்தப் பொருளானாலும் விலைவாசிகள் சாதாரண மக்களால் வாங்கும் அளவில் இல்லை. விலை உயர்வு — பஞ்சப்படி உயர்வு — வரி உயர்வு — மீண்டும் விலை உயர்வு என்று மாறி மாறி உயர்ந்து கொண்டு செல்லும் நிலை.

வயது வந்தோருக்கு வாக்குரிமை வழங்கினோம். பொதுத் தேர்தல்களை நடத்தினோம். ஆனால் என்ன கண்டோம்? லஞ்சம், பித்தலாட்டம், ஏமாற்று வித்தைகள், மயக்கும் பேச்சுக்கள், — இவை மூலம் ஜனநாயக முறையை அவமதித்து மக்களின் அனுமதி பெற்றே, ஜனநாயகத்தை ஒழித்துக் கட்ட முடியும் என்பதைப் பார்க்கிறோம்.

உரிமைகள், சுதந்திரங்கள், சொத்துப் பாதுகாப்பு — எல்லாம் நமக்கு அளித்துத்தான் சென்றார்கள், விடுதலை வாங்கித் தந்த சுதந்திரச் சிற்பிகள். இருபத்தைந்து ஆண்டுகளில் 28 சாஸனத் திருத்தங்கள் செய்து, எந்த உரிமையும் மக்களுக்கு நிரந்தரமாக இல்லை; எந்த சொத்தை வேண்டுமானாலும் சர்க்கார் நஷ்டஈடு கொடுக்காமல், அல்லது ஏதோ கொடுத்ததாகப் பெயர் பண்ணிவிட்டு எடுத்துக் கொள்ளலாம் என்று செய்து விட்டிருப்பதைப் பார்க்கிறோம்.

இதை யெல்லாம் காணும்போது, இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நமக்கு வழிகாட்டிகளாக இருந்த பெரியோர்களின் ஆன்மா இன்று வேதனைப்படும். உள்ளம் துள்ளி வெள்ளி விழா கொண்டாட வேண்டிய சந்தர்ப்பம். ஆனால் நமது அடிப்படை சுதந்திரங்களே பறி போய்க் . கொண்டிருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்ளும் மனத்தெளிவுகூட இல்லாத அளவுக்கு நாம் குழம்பிப் போயிருக்கிறோம்.







எதிர்க்கட்சி ஆட்சி நடத்தும் ஒரே மாநிலமான தமிழகத்தில் அரசுக்குச் சலுகைகள் அளித்து, அது செம்மையாக நடைபெறப் பிரதமர் இந்திரா உதவி செய்வாரேயானால் அதனால் அவரது பெருமை உயரும்.

— சேலத்தில் முதல் மந்திரியின் பேச்சு



# தமிழ் நாட்டிலே

— தீரன் —

## எதிர் அணி உருவாகிறது

சமீபத்தில் நடைபெற்ற விவசாயிகள் போராட்ட வெற்றியின் விளைவாகத் தற்போது தி. மு. க. தலைமையில் உள்ள சில நகரசபைகள் கவிழ்ந்து வேறு தலைமை அமையும் நிலை உருவாகியிருக்கிறது. கூட்டணிக் கட்சிகளின் உதவியுடன் இந்த நகரசபைகளில் பெரும்பான்மை பலமும் பெற்றிருந்த தி. மு. க. இப்போது கூட்டணிக் கட்சிகள் விலகுவதன் காரணமாகச் சிறுபான்மைத் தன்மையை அடைய நேரிட்டிருக்கிறது. கோவை, பரமக்குடி, தூத்துக்குடி ஆகிய நகரங்களில் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நகரசபைகளி



லும், பஞ்சாயத்து அமைப்புக்களிலும் தீவிர கட்சி மனப்பான்மையையும் குறுகிய எண்ணங்களையும் வளர்த்தவர்கள் யாரோ அவர்களே அதன் விளைவை அநுபவிக்கும் காலம் வந்திருக்கிறது. ஆட்சியின் மக்கள் விரோத மனப்பான்மையினாலும், வீண் பிடிவாதங்களாலும், வறட்டு ஜம்பங்களாலும், இன்னும் இப்படி எத்தனையோ பல நஷ்டங்கள் தி.மு.க.வுக்கு வரவே செய்யும். நிதானமும் எதிர்த் தரப்பு நியாயங்களைச் சந்திக்கும் விவேகமும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் இல்லாவிட்டால் எதிரிகளின் எண்ணிக்கை பெருகுவதைப் பார்த்து வருத்தப்பட்டுப் பயனில்லை.

## மனச்சாட்சிக்காக ஒரு குழு

மதுவிலக்கை நீக்கித் தமிழ்நாடு முழுதும் வாழ்க்கை ஒழுங்கையும், ஏழை எளியவர்களின் குடும்பச் செழிப்பையும் பாழாக்கிய தி. மு. க.வினர் தங்கள் மனச்சாட்சியே தங்களை உறுத்துவதாலோ என்னவோ, 'மதுவிலக்குப் பிரசாரக் குழுக் கூட்டம்' என்று அடிக்கடி ஒரு மெல்லிய அரைமனத்தோடு கூடிய பொய்ப் புலம்பலையும் புலம்பிக்கொள்கிறார்கள்.

'தி. மு. கழகத்திற்கும் கழக அரசுக்கும் உயிர்க் கொள்கையான மது அருந்தக் கூடாது என்ற இலட்சியத்தைத் தமிழ் மக்களிடம் எடுத்துக் கூறுவதோடு தமிழக மக்கள் மதுவின் தீமையைப் புரிந்து கொண்டு மது அருந்ாதவர்களாகவும் மதுவிலக்குக் கொள்கையைச் செயல்படுத்துபவர்களாகவும் உருவாக, கழகத் தலைவர் அவர்களாலும் பொதுச் செயலாளர் அவர்களாலும் அமைக்கப்பட்ட மதுவிலக்குப் பிரசாரக் குழுக் கூட்டம் 30-7-72 காலை சென்னையில் கூடியது'' என்று தி. மு. க. தினசரி ஒன்றில் படித்தபோது பலர் விலா வெடிக்கச் சிரித்திருப்பார்கள். வேறு பலர் தி. மு. க.விலேயே இப்படி ஒரு குழுவும் இருக்கும் இரகசியத்தை முதல் முறையாகப் புரிந்து கொண்டு ஆச்சரியப்பட்டிருப்பார்கள்.

மதுவிலக்கை நீக்கியதன் மூலம் சென்ற ஆண்டை விட நடப்பு ஆண்டில் சாராயக் கடைகள் பிரமாதமான தொகைக்குப் போட்டா போட்டியில் ஏலம் போனதும் அரசாங்கத்துக்கு மட்டும் இவ்வகையில் 40 கோடி ரூபாய் வருமானம் இருக்கும் என்பதால் (400 கோடி ரூபாய் இவ்வகையில் மூலதனமா யிருந்தால் ஒழிய 40 கோடி ரூபாய் வருமானம் வராது.) உற்சாகப்படுவதும் ஒரு புறம் நிகழும்போது மேற்கண்ட 'உப்புக்குச் சப்பாணிப் பிரசாரக் குழு' ஊரை ஏமாற்றவா, தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொள்ளவா என்பதுதான் புரியவில்லை. 400 கோடி ரூபாய் மூலதனம் இந்த வகையில் விரயமாகி வருவது பற்றி அவர்கள் யோசிப்பதாய்த் தெரியவில்லை.

'தி. மு. கழகத்திற்கும் கழக அரசுக்கும் உயிர்க் கொள்கையான' என்ற அடைமொழி வாசகத்துக்கு உண்மையிலேயே அர்த்தம் ஏதாவது உண்டா இல்லையா என்பதுதான் நமக்குப் புரியவில்லை. அர்த்தம் இருந்தால் உயிர்க் கொள்கையை அவர்களே கொன்று விட்டு ஒப்புக்குப் புலம்புவதில் உபயோகமில்லை என்றுதான் ஆகிறது.

## கட்சி மகாநாடும் பண வசூலும்

தமிழ்நாட்டில் ஆளும் கட்சியின் மாவட்ட மாநாடுகளுக்கான பண வசூலில் வியாபாரிகள், சிறு தொழிலதிபர்கள், ஹோட்டல் காரர்கள் நிர்ப்பந்தப்படுத்தப்படுவதாகவும் கசக்கிப் பிழியப்படுவதாகவும் தகவல்கள் வரு



கின்றன. சில இடங்களில் இவ்வசூலுக்காகக் கட்சியின் வட்டப் பிரமுகர்கள், மாவட்டப் பிரமுகர்கள், அரசு அதிகாரிகள் ஆகியோர் மூலம் சிறு வியாபாரிகளும் தொழிலதிபர்களும் பயமுறுத்தப்படுவதாகவும் சொல்கிறார்கள். ஆசிரியர்கள்கூட வசூலுக்கு வருகிறார்களாம். மகாநாட்டு முடிவில் 'இத்தனை லட்ச ரூபாய் இம்மாநாட்டின் மூலம் வரவு' என்று ஏதோ பொதுமக்களே விரும்பி வாரி வழங்கியது போல் டாம்பீகமாகக் காட்டிக் கொள்ளத் திரை மறைவில் இவ்வளவு நிர்ப்பந்தங்களும் செய்யப்படுகின்றனவாம். மாவட்டத்தின் ஒவ்வொரு முக்கிய நகருக்கும் இத்தனை ஆயிரம் ரூபாய் என்று சொல்லி வற்புறுத்தி வசூல் நடைபெறுகிறதாம். வரிப்பளு, விலைவாசி உயர்வு போன்றவற்றால் அவதிப்படும் சிறு கடைக்காரர்களும், மக்களும் 'மடியில் பால் வற்றி ரத்தம் வருகிறவரை கறக்கப்படுவது போல்' இப்படிப் பண வேட்டையாடப்பட்டு 300 அலங்கார வளைவுகள், அதிர்வேட்டுக்கள், கோலாகலக் கோபுரங்கள் பல லட்சம் பேர் அமரும் பந்தல், ஆயிரம் லாரிகள், ஐந்நூறு பஸ்கள் என்றெல்லாம் பகட்டுவது அவசியம்தானா? இப்படி மகாநாடுகளுக்குப் பணம் தரச் சொல்லி நிர்ப்பந்தப்படுத்தப் படுவது பற்றிச் சில சிறு வியாபாரிகள் கவர்னரிடம் கூடப் புகார் செய்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. சிறிய கடைக்காரருக்கு இவ்வளவு, பெரிய கடைக்காரருக்கு இவ்வளவு; சிறிய லாட்ஜ்காரர்களுக்கு இவ்வளவு, பெரிய லாட்ஜ்காரருக்கு இவ்வளவு; பஞ்சாயத்து ஊருக்கு இவ்வளவு, நகரத்துக்கு இவ்வளவு என்று பட்டியல் போட்டுப் பணம் கறக்கப்படுகிறதாம். வியாபாரிகளும் கடைக்காரர்களும் 'மாவட்ட மாநாட்டுச் செலவு' என்ற பெயரிலும் ஒரு தண்ட வரி அழவேண்டியிருக்கிறது என்கிறார்கள்.

## ஆலயம் பற்றிய ஒரு பிரச்னை

இந்துக்கோவில்களில் இந்துக்கள் அல்லாத அந்நிய மதத்தினர்களும் தாராளமாகச் செல்லலாம் என்று தமிழ்நாடு அரசாங்கம் அனுமதித்தது செல்லாது என்று தீர்ப்பாகி விட்டது.

சகஜ பாவத்தோடு கோவில்களைப் பார்க்க வருகிற அந்நிய மதத்தினருக்குச் சட்டம் என்பது அவசியமில்லை. அப்படி அவர்கள் வந்து பார்க்கக் கூடிய இடங்கள் என்னென்ன என்பதற்கு மட்டும் ஓர் எல்லை இருப்பது நல்லது. ஆகம விதிகள், ஒழுங்குகளை அறியாதவர்களும் அவைத மதிக்கப் பழக்கப்படுத்தப் படாதவர்களும் கோவில்களில் எங்கே வேண்டுமானாலும் வரலாம் என்று அனுமதிப்பது வம்பை விலைக்கு வாங்குவது போலாகும். முகமதியர்களின் மசூதிகளில் கூட ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு மேல் பிற மதத்தவர் செல்ல முடியாது. தங்கள் மதம், தங்கள் கடவுள்கள், தங்கள் பல்லாயிரங்கால வழிபாட்டு முறைகள் ஆகியவற்றில் தங்களுக்கே நம்பிக்கை இல்லாத ஒரு கூட்டம் இந்தத் தாரான உரிமைகளை அந்நிய மதங்களைச் சேர்ந்தவர்களுக்கும் வழங்க முன் வருவதனால்தான் நாம் சந்தேகப்பட வேண்டியிருக்கிறது. காலில் செருப்பை அணியாமல் வருதல், இறைவனின் திருமுன் மிக அருகே செல்லச் சட்டையின்றி இருத்தல் போன்ற மரியாதை முறைகள், பயபக்தி இவற்றை எல்லாம் அம்முறைகள் பற்றி அறியாதவர்களிடம் எதிர்பார்க்க முடியாமலும் போகலாம். சமய சம்பந்தமானவற்றில் சிறு நம்பிக்கைகூட இல்லாதவர்கள் அதில் பெரிய பெரிய மாறுதல்களை மட்டும் செய்ய ஆசைப்படுவதுதான் விநோதமாக இருக்கிறது.



# நாங்கள் பேக்கை மாற்றிவிட்டோம்...

சிவப்பும், பொன்னிறமும்
இணைந்த கவர்ச்சிமிகு
பேக்காக... உங்களுக்கு
கூடுதலான செலவின்றி
அதிக கவர்ச்சியான பேக்.




## ...ஆனால் நாங்கள் ஒருபோதும் பிஸ்கெட்டை மாற்றவே மாட்டோம்



போஷாக்கு மிகுந்த அதி
ருசியுள்ள பிஸ்கட்.
பின்வருவனவைகள் எப்பொழுதும்
அடங்கியது.
வைட்டமின்கள் எ..டி..பி1..பி2..
கால்ஷியம், ப்ரோட்டீன், பால்,
கோதுமை, சர்க்கரை, க்ளூகோஸ்.

# பார்லே க்ளூகோ

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள்



everest/871 rd/PP TM

# சுதந்திர தினச் சிந்தனைகள்

கே. பி. கேசவ மேனன்

ஸ்ரீ கே. பி. கேசவமேனன் அவர்கள் கேரளத்தின் மூதறிஞர். 'மாத்ருபூமி' என்ற புகழ் கொண்ட மலையாளப் பத்திரிகையின் பிரதம ஆசிரியர். அவர் பிரபலமான வழக்குரைஞராகப் பெயரெடுத்தவர். பிறகு சுதந்திரப் போராட்டத்தில் குதித்து, வைக்கம் சத்தியாக்கிரகத்தில் தலைமை தாங்கிச் சிறை புகுந்தார். 1923ல் 'மாத்ருபூமி'யை ஸ்தாபித்து, அதைத் தேசத்தின் தலைசிறந்த பத்திரிகைகளில் ஒன்றாக்கினார். சுதந்திர பாரதத்தில் இலங்கையில் நமது ராஜாங்கத் தூதராகச் சிலகாலம் பணிபுரிந்தவர் அவர். மலையாளத்தில் பல நூல்கள் எழுதியுள்ள ஸ்ரீ கேசவமேனன் பத்மபூஷண விருதும் சாகித்ய அகாதமிப் பரிசும் பெற்றவராவர். அவரது தேர்ந்த கருத்துக்கள் ஆழ்ந்த சிந்தனைக்குரியன.

பல்லாண்டுகள் இன்னல் அநுபவித்தும், தியாகம் புரிந்தும் நாம் சுதந்திரம் பெற்றோம். சுதந்திரம் பெற்றபின் இருபத்தைந்தாண்டுகள் சென்றுவிட்டன. விடுதலை கண்ட பாரதம் தொடக்கத்தில் சீராகச் செயல்பட்டது. நமது சரித்திரத்திலேயே முதன் முறையாக அகில பாரதமும் ஒரே ஆட்சிபீடத்தின் கீழ் கொண்டுவரப்பட்டது. நமது அரசாங்கம் சட்டசபைகளின் மூலம் ஆட்சி புரியும் ஜனநாயக மரபை ஏற்றது. நமது நிர்வாகத்தை நடத்த அநுபவம் பொருந்திய அருமையான அதிகாரிகள் இருந்தனர். பிரிட்டிஷ் வழிப்படி அமைந்த சட்டத்தின் ஆட்சியை நமது அரசாங்கத்தின் வழிகாட்டியாகக் கொண்டோம். எல்லாவற்றுக்கும் மேலாக, வளமும் வளர்ச்சியும் கொண்ட உலக மொழியான ஆங்கிலத்தை நமது ஆட்சி மொழியாகவும், நீதிமன்ற மொழியாகவும், உயர் கல்வி போதனைமொழியாகவும் பெற்றிருந்தோம். இந்த அநுகூலமான அம்சங்களுடன் சுதந்திர ஆட்சியைத் தொடங்கினோம். அதன்பின் சிறிது காலம் எல்லாத் திசைகளிலும் தெற்றென முன்னேற்றம் கண்டோம்.

நாம் சுதந்திரப் போராட்டத்தை நடத்திய பாங்கு, சத்தியத்திலும் அஹிம்சையிலும் நமக்கிருந்த உறுதியான பிடிப்பு, எதிராளிகளிடம் நாம் காட்டிய நேர்மை — தயாளம், எந்த வல்லரசுக் கோஷ்டியுடனும் சேராத நடுநிலைமையான அந்நியக் கொள்கை, முன்னேற வேண்டும் என்பதில் நமக்கு இருந்த பேரார்வம் ஆகியன உலகம் முழுவதன் பாராட்டையும் பெற்றன. மகாத்மா காந்தியின் சக்தியூட்டும் தலைமையின் கீழ் சுதந்திரப் போராட்டத்தின்போது காட்டிய ஐக்கியத்தையும் உறுதியையும், ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவின் உயிர்த் துடிப்புள்ள துணையுடன் நவபாரதத்தை நிர்மாணிக்கும் சிரமசாத்தியமான முயற்சியிலும் நாம் காட்டினோம். தேசத்தின் பல பகுதிகளில் சர்வகலாசாலைகளும், தேசிய ஆராய்ச்சிக் கூடங்களும் தோன்றின. நவீன உபகரணங்களும் வசதிகளும் கொண்ட மருத்துவமனைகள் ஏராளமாக நிறுவப்பட்டன. பெரிய ஏரிகளும், பாசனத் திட்டங்களும் பாரதத் தாயின் திருமுகத்தில் புது அழகைப் பொலிவித்தன. சிறியதும் பெரியதுமான தொழில்கள் பல்கிப் பெருகின. சுதந்திர பாரதத்தின் அந்த ஆரம்ப காலங்களில் இந்தியாவுக்கு வந்த அந்நியர்கள், நமது தேசம் தனது லட்சியத்தை நோக்கிச் செல்லும் மார்க்கத்தையும் வேகத்தையும் மனமாரப் புகழ்ந்தனர்.

தேசம் இவ்விதம் உயர்வு கண்டுகொண்டிருக்கையில், சுதந்திரம் பெற்றுத் தருவதில் முக்கியமான கருவியாக இருந்த காங்கிரஸை அனைவரும் ஆதரித்தனர். சுதந்திரப் போராட்டத்தின்போது காங்கிரஸில் ஈடுபாடில்லாதவர்களும்கூட, அது ஆட்சிப் பொறுப்பு ஏற்றபின் இதயபூர்வமாக அதில் சேர்ந்தனர்.

இவ்விதமாக காங்கிரஸுக்கு அந்தஸ்தும் செல்வாக்கும் வலுக்கவே, கண்டவர்களெல்லாம் அதில் சேரலாயினர். தேசத்துக்குச் சேவை செய்வதற்காக இல்லாமல், சொந்த லாபம் தேடிக் கொள்வதற்கும் பலர் அதில் சேரலாயினர். இந்த நிலையில் காங்கிரஸ் கட்சியைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவுக்கே கடின

ராஜாஜியும் ஸ்ரீ கேசவமேனனும்



மாயிற்று. பழைய ஐக்கியம் குறைவதற்கான அறிகுறிகள் தோன்றலாயின. ஸ்ரீ நேருவின் பிடிப்புத் தளரலாயிற்று. ஆனால் 1962-ல் சீனம் நம் நாட்டின்மீது படையெடுத்த போது, மக்கள் அனைவரும் சர்க்காரை ஏகோபித்து ஆதரித்து, எதிரியை எதிர்க்கச் சித்தமாயினர். சீனம் பின்வாங்கியபின், மீண்டும் இந்த ஐக்கியம் மறையலாயிற்று. அதிலிருந்து நாம் முன்னேற்றத்துக்கு மாறாகப் பின்னேற்றமே கண்டு வருகிறோம்.

சுதந்திரம் பெற்று இருபதைந்தாண்டு களுக்குப் பின் தேசத்தில் நடப்பதைப் பாருங்கள்! எல்லாத் திசைகளிலும் பிளவுப் போக்கு தனது கோரத் தலையைத் தூக்கிப் பார்க்கிறது. மொழி வெறி, குறுகிய வகுப்புப் பித்து, அற்பமான பிரதேச மோகம் எல்லாமாகச் சேர்ந்து சதி செய்து நாட்டைப் பலவாக்கிப் பிளந்து வருகின்றன. கண்டும் கேட்டும் இராத அளவில் தேசத்தின் சகல துறைகளிலும் ஊழலும் லஞ்சமும் பரவி வருகின்றன. இதனால் சாமானிய மக்களுக்கு நீதியும் நியாயமும் கிடைப்பதே கடினமாகி விட்டிருக்கிறது. நாம் பெற்றிருந்த புகழ் அனைத்தும் பாழாகிவிட்டது. நமது வர்த்தகத்துக்கும் இது ஊறு விளைவித்திருக்கிறது.

சுதந்திர இந்தியாவின் இன்னல்கள் நமது மொழிக் கொள்கையில்தான் தொடங்கியது. எல்லா நாடுகளிலும், எல்லாக் காலங்களிலும் மொழியும் மதமும்தான் மனக் கசப்பு, துவேஷம் இவற்றைத் தீவிரமாகக் கிளறும் சக்திகளாக இருந்திருப்பதைப் பார்க்கிறோம். இதற்கு இந்தியாவும் விலக்கல்ல என்று ஆகி விட்டது. தற்போது ஆங்கிலத்துக்கு எதிராக நாட்டில் காணப்படும் துர்ப்பாக்கிய மனப்பான்மை, பாரதத்தின் ஐக்கியத்துக்கும் முன்னேற்றத்துக்கும் தீங்கு பயப்பதாகும். நமது தேசத்தின் புது விழிப்புக்கும் மறுமலர்ச்சிக்கும் ஆங்கிலம்தான் உதவியிருக்கிறது. இந்தியாவின் பல பகுதிகளில் பல்வேறு மொழிகளைப் பேசிவரும் அறிஞர்கள் அனைவரும் சமூகத் தொடர்பு கொண்டு, சிந்தனைப் பரிவர்த்தனை செய்து கொள்ள ஆங்கிலமே உதவி வருகிறது. இரு நூற்றாண்டுகளுக்கும் மேலாக நம் நாட்டில் நிலவி வரும் மொழி ஆங்கிலம். அது புதிதாக ஏற்கப்படும் ஒரு மொழியல்ல. முன்னரே நம் கைவசமுள்ள ஒன்று அது. நீண்ட காலமாக நம் கைப் பொருளாக உதவி வருகிற அம்மொழியை விடாமல் இருக்க வேண்டும் என்பதே விவேகம். நவீன சிந்தனை, நவீன அறிவியலுடன் நாம் தொடர்பு கொண்டிருக்க வேண்டுமாயின், விஞ்ஞானத்திலும் தொழில் நுணுக்கத்திலும் மற்றவர்களுக்குச் சமதையாக நாம் முன்னேற வேண்டுமாயின், உலக நாடுகளிடை நமது அந்தஸ்தையும் செல்வாக்கையும் நீடிக்க வேண்டுமாயின், நாம் ஆங்கிலம் கற்றேயாக வேண்டும். ஆங்கிலத்தை நாம் அலட்சியம் செய்வது, நமக்கு நாமே தீங்கு செய்து கொள்வதுதான். இந்த நாட்டில் நிரந்தரமாக ஆங்கிலம் இருக்க வேண்டுமென நான் வாதாடவில்லை. மக்களின் நலனையும் நாட்டு நலனையும் முன்னிட்டு இன்னும் நீண்ட காலத்துக்கு அம் மொழியை நீடிக்க வேண்டும் என்றே கூறுகிறேன். தேசத்தில் ஐக்கியத்தை வளர்க்க வேண்டுமாயின் மொழி விஷயத்தில் நமக்கு இன்னும் பரந்த மனமும், விவேகமும் இருக்க வேண்டும்.

இந்தியா விடுதலை பெற்று இருபத்தைந்து ஆண்டுகள் ஆனபிறகும் நமது கல்வி முறை குழப்பமாகவே உள்ளது. சுதந்திர பாரதம் என்பது நவபாரதம். நவபாரதத்தின் தேவைகளுக்கு ஏற்ற புதிய கல்வி முறை ஏற்பட்டாக வேண்டும். நமது புராதன கலாசாரத்தின் சிறப்பு அம்சங்கள், மேல்நாட்டுக் கல்வி முறையின் சிறப்பு அம்சங்கள் ஆகிய இரண்டையும் இணைத்துத் தர வேண்டும். நம் அறிவை வளர்ப்பதோடு, நமது நடத்தை, உள்ளப்பாங்கு இவற்றையும் செம்மை செய்வதாகக் கல்வி முறை அமைய வேண்டும். வெவ்வேறு ராஜ்யங்களின் பிரத்தியேகத் தேவைகளை ஒட்டி ஆங்காங்கு சிறு மாறுபாடுகள் இருப்பினும், மொத்தத்தில் அகில இந்தியாவுக்கும் கல்விமுறை ஒரே ரீதியில் இருக்க வேண்டும். தெளிவான, சரியான கல்விக் கொள்கையில்லாமல் நாம் விசேஷ முன்னேற்றம் காண இயலாது.

சுதந்திரத்துக்குப் பிற்பாடு சாதி, வகுப்பு உணர்ச்சிகள் வலுத்து வந்திருக்கின்றன. வகுப்பு நலனுக்கும் நாட்டு நலனுக்கும் இடையே முரண்பாடு உண்டாகும்போது பலர் தயக்கமின்றி நாட்டு நலனைப் பலி கொடுத்தாவது வகுப்பு நலனைப் பேணிக் கொள்ள முற்படும் நிலையைக் காண்கிறோம். தேசத்தைக் கருதாமல் சுயநலனைக் கருதியே மக்கள் பொதுக் காரியங்களை ஆர்வத்துடன் இழுத்துப் போட்டுக் கொள்வதைப் பார்க்கிறோம். இவ்விதமாக, பொதுக் காரியங்கள் நிறைய நடக்கின்றன; ஆனால் அவற்றில் பொதுநல உணர்ச்சியோ வெகு வெகு குறைவாகவே இருக்கிறது!

மக்களுக்குச் சட்டத்திலும், சமூக ஒழுங்கிலும் மதிப்புணர்ச்சி இல்லை. ஒவ்வொருவனும் ஒவ்வொருத்தியும் தன் இஷ்டப்படியே காரியத்தை நடத்திக் கொள்ள முற்படுவதைப் பார்க்கிறோம். எந்த அற்ப விஷயத்துக்கும், 'சத்தியாக்கிரகம்' மேற்கொள்கிறார்கள். கட்டுப்பாடு மறைந்தே போய்விட்டது. சர்க்கார் அலுவலகங்கள், கல்விச் சாலைகள், தொழிலகங்கள், பொதுஸ்தலங்கள் அனைத்திலுமே ஒழுங்கீனம் பரிதாபமாக மலிந்திருக்கிறது. இது தேசத்தின் எதிர்காலத்தை விபரீதமாகப் பாதிக்கும்.

தனிமனிதர் ஒவ்வொருவரும் தம்மைப் புத்துருவாக்கிக் கொண்டாலொழிய, நாட்டுக்குப் புத்துருவம் தர முடியாது. தனி மனிதனின் குணநலன்களை வளர்ப்பதுதான் தேசத்தின் பெருமைக்கு அஸ்திவாரம். கடும் உழைப்பு, உறுதியான கட்டுப்பாடு, உன்னதமான நேர்மை, பணி புரிவதில் அடங்காத தாகம், சாதித்தே தீருவது என்ற துடிப்பு, இலட்சியமுள்ள வாழ்வு நடத்துவதில் ஆர்வம் இவைதாம் தனிமனிதனை மேம்படுத்தி, அதன் வழியே நாட்டை மேம்படுத்தும். தேசம் ஐக்கியமாகவும், உறுதியாகவும் நிலைத்து நிற்க வேண்டுமாயின், முதலில் அவரவரும் தம்மைத் தூயவராகவும், உறுதி வாய்ந்தவராகவும் ஆக்கிக் கொள்வோமாக!

# உங்கள் சாப்பாட்டு அறையில் கங்காரூ




உங்கள் சாப்பாட்டு அறையில் கங்காரு
பெயின்டுகள், சிக்கனமானவை, நீடித்து
நிற்கும், மென்மையான பட்டு மெருகு.
சிறப்பாகச் சுத்தம் செய்வதற்கென
விசேஷமாகச் சோதிக்கப்பட்டவை. பளிச்சிடும்
முப்பத்திரண்டு வர்ணங்கள்.

பென்டோலைட் சூப்பர் சிந்தடிக் எனமல்: பளபளப்புமிக்க, நுணக்கமான எனமல், சிறப்பாகச் சுத்தம் செய்யக் கூடியது. வெளிப்புற மற்றும் உட்புற உபயோகத்திற்கு.

கங்காரு ஹை-க்ளாஸ் சிந்தடிக் எனமல்: ஷார்ட் ட்ரையிங், கீறல் விழாத் தன்மையுடைய எனமல் உலோகங்களுக்கும் தரைகளுக்கும் உகந்தது.

பென்டோலைட் ஆயில் பவுண்ட் டிஸ்டெம்பர்: மென்மையான ஸாடின் ஃபினிஷ் சிறப்பாகச் சுத்தம் செய்யக்கூடியது.

பென்டோலைட்—அக்ரிலிக் ப்ளாஸ்டிக் எமல்ஷன் பெயின்ட், ஆயுட்காலம் நீடித்து நிற்கிறது. சீக்கிரம் உலர்ந்துவிடுகிறது. பட்டுப்போன்ற ஃபினிஷ் கொண்டது. வீடுகளுக்கு உன்னதமானது.

டென்மார்க்கின் பிரபல ஹெம்பெல்ஸ் நிறுவனத்தின் கூட்டுறவுடன் செயல்படுவது.

## பாம்பே பெயின்ட்ஸ்

அண்ட் அலைட் ப்ராடக்ட்ஸ் லிட்.

பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் தொழிற்சாலை: கார்ரிடார் ரோடு, கவன்பாடா, செம்பூர், பம்பாய்-74 AS

VISION-722 TAM

இவ்விதழ் அட்டையில் பாரத மாதாவின் அருந்தவப் புதல்வர்களில் ஒருவரான அரவிந்த மாமுனிவரின் திரு உருவத்தை வெளியிட்டு வணங்குகிறோம். பாரத சுதந்திரத்தின் வெள்ளி விழாவன்றே, யோகேசுவரராகத் திகழ்ந்த அரவிந்த மாமுனிவரின் நூற்றாண்டு விழாவும் நிகழ்வதில் பொருத்தமுண்டு. அவர் தொடக்கத்தில் தேச சுதந்திரத்துக்காகப் போராடிய முன்னோடிகளில் முதலிடம் கொண்டவர் ஆவர். எனவே இந்த ஆன்மிக சிம்மத்தின் அரசியல் சிந்தனையையும் நாம் அறிவது பொருத்தமேயன்றோ?

# அரசியலில் அரவிந்தரின் அரும்பணி

## டாக்டர் கரண் ஸிங்

அரவிந்தரின் தேசிய உணர்வு வெறும் அரசியல், பொருளாதார அடிப்படை கொண்டது மட்டுமல்ல. தாயகத்தின் தெய்விகத்தை அவர் உணர்ந்திருந்தார். இந்தத் தெய்விகத்தைக் கெடாமல் காக்கவே சுயாட்சி ஏற்பட வேண்டும் என்று விரும்பினார். வேதத்திலிருந்து தொடங்கி, பங்கிம் சந்திரரின் 'வந்தே மாதர' கோஷம் வரையில் அரவிந்தருக்கு முன்பே தாயகத்தைத் தெய்விகமாகப் பாவிக்கும் பாங்கினைக் காண்கிறோம் என்பது உண்மை. பிற தேசங்களிலும் இவ்விதமே தாய்நாட்டைத் தெய்வமாக உருவகப்படுத்தும் வழக்கம் உண்டுதான். அரவிந்தர் ஆற்றிய புதுப் பணி யாதெனில், அவர் 'தாய்நாட்டின் தெய்விகம்' என்ற சமயரீதியில் அமைந்த கருத்தை அரசியலில் பிணைத்தார்; இந்தப் பக்தி உணர்வையே அரசியல் உணர்வுக்குச் சக்தி ஊட்டும் விசைக் களமாக்கினார். ''பாரத மாதா'' என்பதாக நாட்டை ஒரு தெய்வமூர்த்தியாக வழிபட்ட போது தன்னால் ஆழ்ந்த உணர்வு பிறந்தது; அற்புத வாக்கு பிறந்தது; அதோடு அந்தத் தெய்வத்துக்காகத் தன்னையே பலி தந்து கொள்ள வேண்டும் என்ற தியாக சிந்தையும் ஜனித்தது. இவ்விதமாக அரவிந்தர் தாம் அரசியலில் ஈடுபட்டிருந்த ஒருசில ஆண்டுகளிலேயே தாய்நாட்டிடம் பக்தியை உண்டாக்கி மக்களுக்கு ஆவேசமும், சக்தியும் ஊட்டியதற்கு ஈடிணையாக எங்குமே காண இயலாது. அரசியல் அடிப்படையில் அமைந்த தேசிய இயக்கத்தில் சமய உணர்வினை இசைத்ததன் மூலம் அவர் சுதந்திரப் போராட்டத்துக்கு ஒரு புதிய கன பரிமாணமே கொடுத்து விட்டார் எனலாம். அவரது ''பவானி மந்திர''த்தை அரசியல் வேதமாகப் பல்லாயிரம் மக்கள் ஏற்றனர்; ''வந்தே மாதரம்'' என்ற கோஷத்துடன், முகத்தில் மலர்ச்சியுடன் அந்நியரின் அடக்கு முறைக்கும், ஏன் மரணத்துக்கும்கூட முகம் கொடுத்தனர். அது வெறும் பொருளாதார இயக்கமல்ல; அரசியல் இயக்கமும் அல்ல; ஆத்மிக இயக்கமாகவே தீவிர உணர்ச்சியுடன் பொலிந்தது. அதன் நோக்கமும் அரசியல் — பொருளாதார விடுதலை மட்டுமல்ல. இந்தியரான ஆண் பெண் அனைவரையும், அந்நியராட்சியிலிருந்து அரசியல் ரீதியில் விடுவிப்பது மட்டுமின்றி, அவர்களைப் பூரண ஆன்ம சக்தி படைத்தவர்களாக்குவதே சுதந்திரப் போராட்டத்தின் உன்னத லட்சியம் எனக் கொண்டிருந்தார் ஸ்ரீ அரவிந்தர்.

வெள்ளையர் ஆட்சியிலிருந்து முற்றிலும் விடுபட்டுப் பூரண சுயராஜ்யம் பெற வேண்டும் என்று கூறியவர்களின் முன்னோடி அரவிந்தரே. அற்புதமான வாக்குவன்மையுடன் மிதவாதிகளைப் பரிகசித்தார். இந்திய மக்களை மிதவாதத்திலிருந்து மீட்டு, தீவிர வாதத்துக்குத் திருப்பியதில் அரவிந்தர் செய்த பணி அருமையானது. அறிஞருலகு மட்டுமே அதுவரை அக்கறை காட்டி வந்த சுதந்திரப் போராட்டத்தில் பொதுமக்கள் அனைவரும் கலந்து கொண்டு அது மகத்தான ஜனநாயக இயக்கமாக ஆவதற்கு வழிவகுத்த மார்க்கதரிசிகளில் அரவிந்தரும் ஒருவர்.

அரவிந்தர் - வெண்கலச் சிலை



பெருத்த தியாகம் ஏதும் செய்யாமல் வெள்ளையரிடம் சிறிது சிறிதாக யாசகம் பெறலாம் என்ற கருத்து நிலவிய காலத்தில், தேச சுதந்திரம் இவ்வளவு சௌகரியமாகக் கைக்கு வராது என்று கண்டார் அரவிந்தர். விடுதலைக்காக மக்கள் அரும் பாடுபட்டு, பெரும் தியாகங்கள் புரிந்து, இன்னல்களையும் இடுக்கண்களையும் இன்முகத்துடன் ஏற்க வேண்டும் எனக் கருதினார். இதற்குத் தேவையான மனப் பாங்கினையும் மக்களுக்குப் புகட்டினார். ''ரத்தம் சிந்தியும், நெருப்பில் வெந்தும் நாம் சுதந்திரம் பெற வேண்டும்'' என்று அறைகூவி மக்களைத் தியாகத்துக்குத் தட்டி எழுப்பினார்.

அரசியல் தலைவர்களிடையே ஸ்ரீ அரவிந்தரின் இலக்கிய அறிவு அபரிமிதமானது. அவர் இந்தியக் கலாசாரத்தின் ஊற்றுக் கண்களைக் கண்டு கொண்டவர். அறிவும் ஆவேசமும் மிளிரும் வாசகங்களில் அவர் அதன் சிறப்பை விளக்கி எழுதினார். பாரத நாகரிகத்தை அவர் இவ்விதம் எடுத்தியம்பியதாலேயே, அதுகாறும் உயர்வாகக் கருதப்பட்டு வந்த ''மேல்நாட்டின் மேலான நாகரிகம்'' ஒரு கட்டுக்கதைதான் என்று தெளிவாயிற்று. ''சுதந்திர தத்துவத்தின் சொந்தக் குரல்'' என்றும், ''பாரத ஆத்மாவின் சொந்த வாக்கு'' என்றும், இதனாலேயே ரவீந்திரநாத தாகூர் அரவிந்தரைப் போற்றினார்.

அரவிந்தரின் அரசியல் சிந்தனையில் குறிப்பிடத்தக்கதோர் அம்சம், அவர் ''விதேசி பகிஷ்கரிப்பு'' என்ற எதிர்மறை இயக்கத்துக்கு ஆதரவு தந்ததோடு நிற்கவில்லை; கையோடு கையாக, ''சுதேசி வளர்ச்சி'' என்ற ஆக்க ரீதியான திட்டத்தையும் வலியுறுத்தி வந்தார்.

வன்முறையையும் அரவிந்தர் அநுமதித்தார் என்பதை ஒரு குறையாகக் கருதுபவர் உண்டு. ஆனால் நாம் அவரது மனோ பாவத்தைப் புரிந்து கொண்டால் குறை சொல்வதற்கில்லை. ஒருவன் தன்னைப் பெற்ற தாய்க்கு அந்நியன் ஒருவன் தீங்கு செய்வதைக் காணும்போது, அவளை மீட்பதில் ஹிம்சை, அஹிம்சை இவற்றையா எண்ணுவான்? தேசபக்தியைத் தீவிர சமயமாக வாழ்ந்து காட்டிய அரவிந்தர் இந்த மனோ பாவத்தில்தான் இருந்தார்.

அரவிந்தரின் ஈடுபாடு தாய்நாட்டோடு முடிந்து விடவில்லை. அது உலகம் முழுவதையும் தழுவியது. பாரதம் தன்மட்டில் சுதந்திரம் பெற்றுவிட்டால் போதாது; சுதந்திரம் பெற்றபின் உலகம் முழுவதையும் உய்வுக்கும் நிலைக்கு அது உயர்ந்திருக்க வேண்டும் என்றே விரும்பினார். சகல தேசங்களும் ஓர் ஆத்மிக குடும்பமாக ஐக்கியப்பட வேண்டும் என்பதே அவரது அபிலாஷை.

அரசியலில் ஐந்தே ஆண்டுகள் தீவிர ஈடுபாடு கொண்டிருந்த அரவிந்தர் அதனில் விளைவித்த மாற்றங்கள் அற்புதமானவை. நவ இந்தியாவை நிர்மாணித்த மகாசிற்பிகளில் அவர் ஒருவர். மகாத்மா காந்தியும் மற்றோரும் எழுப்பிய சுதந்திர மாளிகைக்கு அஸ்திவாரம் அமைத்தோரில் ஒருவர் அவர்.

1910க்குப் பின் அவர் அரசியலில் நேரடியாகக் கலந்து கொள்ளாவிடினும், இந்திய சுதந்திர இயக்கத்தில் அவரது ஈடுபாடு என்றும் குறையவில்லை. அவரது எழுபத்தைந்தாவது பிறந்த தினமாகிய 1947 ஆகஸ்ட் 15ந் தேதியன்று தமது பணிகளின் கனியாகப் பாரத சுதந்திரம் பழுத்ததைக் கண்டு மகிழ்ந்தார்.




□ சென்ற டிசம்பர் மாதம் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் நடந்த போரில் குஜராத் கட்ச் பகுதியில் புஜ் நகரிலுள்ள விமான நிலையம் பாழடைந்து விட்டது. அதைச் செம்மைப்படுத்தும் வேலைக்குக் கூலிக்கு ஆட்கள் நியமிக்கப்பட்டனர். அவர்கள் பாகிஸ்தானின் விமானத் தாக்குதலுக்குப் பயந்து ஓடி விட்டனர். ஆனால் புஜ் நகருக்கு அக்கம் பக்கங்களிலுள்ள 24 கிராமங்களைச் சேர்ந்த பட்டேல் வகுப்பைச் சேர்ந்த கம்பி இளம் பெண்கள் நூறு பேர் தைரியமாக வந்து விமான தளத்தை ரிப்பேர் செய்தனர். அவர்கள் ஒவ்வொரு நாளும் தங்கள் வண்டிகளிலேயே வந்து வேலை செய்தனர். செய்த வேலைக்கு ஊதியம் பெற்றுக் கொள்ள மறுத்தனர். ஏன், சிற்றுண்டி உணவுகூட ராணுவ அதிகாரிகளிடமிருந்து ஏற்க மறுத்துவிட்டனராம். மேற்கண்ட விவரங்களைச் சம்பந்தில் நமது விமானப் படை பிரதம தளபதி மார்ஷல் பி. ஸி. லால் வெளியிட்டார்.

□ ஆஸ்திரேலியாவில் சுற்றுப் பிரயாணம் செய்வதாக இருந்த சிறு டேபிள் டென்னிஸ் கோஷ்டி தனது சுற்றுப் பிரயாணத்தை ரத்து செய்து விட்டது. காரணம், ஆஸ்திரேலியாவில் பார் மோஸாவைச் சேர்ந்த பெண்கள் கூடைப் பந்து கோஷ்டி அந்தச் சமயம் இருந்ததுதான்!

□ ஐ.நா. சபையின் வராந்தாவில் ஓர் அமெரிக்கத் தூதரும் ருஷ்யத் தூதரும் சந்தித்துக் கொண்டார்கள். அவர்களிருவரிடையே பின்கண்டபடி சம்பாஷணை நடைபெற்றது:

அமெரிக்கர்: உங்களைப் பாராட்டுகிறேன் - எகிப்திலிருந்து நீங்கள் பின்வாங்குவதற்கு.

ருஷ்யர்: ஏன்?

அமெரிக்கர்: வியட்நாமியர் எங்களையும் இப்படிப் பத்து ஆண்டுகளுக்கு முன் உதைத்து விரட்டியிருந்தால் நாங்கள் இன்று எவ்வளவு சந்தோஷமாக இருப்போம்!

□ மதுரை கார்ப்பரேஷன் காங்கிரஸ் உறுப்பினர் அண்மையில் நடைபெற்ற விவசாயிகள் போராட்டத்தின்போது போலீஸ் சுட்டதால் உயிர் இழந்தவர்களுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் தீர்மானம் ஒன்றை வாசித்து மேயர் முத்து அவர்கள் மேஜையின் மீது வைத்தார். தீர்மானத்தை மேயர் குப்பைக் கூடையில் போட்டார்! தொகுப்பு: எஸ்.வி.எஸ்









“ஆமாம்,
அம்மா க்ரைலின்
கொண்டு
தீட்டியது”.

“இது
கையால்
தீட்டப்பட்டதா?

தையலிலோ, எம்ப்ராய்டரியிலோ
கவிதாவின் தாய் அவ்வளவு கெட்டிக்
காரியல்ல. ஆனால் விளையாட்டு மைதானத்தில்
மிகப் பிரமாதமாக உடையணிந்திருப்பது
அவள் குழந்தைகளே. எப்படிச் சமாளிக்கிறாள்?
கேமல் க்ரைலின் துணி வண்ணங்கள்
தான் உள்ளனவே!

செழுமையான, அழகும், உத்தரவாத
மான கெட்டித்தன்மையுள்ள வண்ணங்கள்—
கேமல் க்ரைலின் வண்ணங்கள்.

## கற்றிடுவீர்— க்ரைலின் பெயிண்டிங்

இன்றே எமது தபால்வழி பயிற்சியில் சேருவீர்

கேமல் க்ரைலின் தயாரிப்பாளர்கள் உருவாக்கித் தந்திடும் ஒப்பற்ற வாய்ப்பு. ஓய்வு நேரத்தில் உங்கள் வீட்டில் இருந்த படியே துணிகளில் வண்ணம் தீட்டும் கலையைக் கற்றுக் கொள்ளுங்கள். வண்ணம் தீட்டும் நுட்பத்தில் தேர்ச்சிபெற வகை செய்யும் ரூ. 12 மதிப்புள்ள வண்ணப் புத்தகம் உங்களுக்கு



இலவசமாக கிடைக்கும். இத்தனைக்கும் ரூ. 20 மட்டுமே! பிரபல ஓவியரும் எங்களது கலை ஆர்ட் டைரக்டர் திரு. பால் வாட் அவர்களின் நேரடிப் பயிற்சியும் கவனிப்பும் கிடைக்கிறது.

தொடர்பு கொள்க:
க்ரைலின்
கரஸ்
பாண்டன்ஸ்
ஸ்கூல்
கேம்லின்
ப்ரை. லிட்.,
ஜே. பி. நகர்,
பம்பாய்-59




camel
Cryl
COLOURS

VISION 723 TAM

# ராஜாஜியின் ஜெயில் டைரி



ராஜாஜி அவர்கள் 1921-ம் வருடம் சிறைசென்றபோது எழுதிய "ஜெயில் டைரி" குறிப்புக்களைத் தொகுத்துத் தமிழ்ப் பண்ணையார் "சிறையில் தவம்" என்று தலைப்பிட்டு நூல் வெளியிட்டார்கள். அப்புத்தகத்தின் முன்னுரையாவது: நமது வணக்கத்துக்குரிய தலைவர் ராஜாஜி ஆங்கிலத்தில் எழுதிய "ஜெயில் டைரி" என்ற நூலின் தமிழாக்கம்தான் இச் 'சிறையில் தவம்' என்ற நூல். இதைத் தமிழில் மொழிபெயர்த்தவர் அறிஞர் பொ. திருகூடசுந்தரம்பிள்ளை அவர்கள்.

## 1921 டிசம்பர், 21உ

*1921*ம் வருஷம் டிசம்பர் மாதம் இருபத்தோராம் தேதி பிற்பகல் நானும் நமது மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியாரும் வேலூர் மத்திய சிறைக்கு வந்து சேர்ந்தோம்.



வேலூரில்தான் எங்கள் விசாரணை நடந்தது. மாஜிஸ்டிரேட் பகல் ஒரு மணிக்குத் தீர்ப்புக் கூறினார். எங்களைக் கூட்டிப் போகப் போலீஸ் ஜவான்கள் வரக் கொஞ்சம்காலதாமதமாயிற்று. அவர்கள் வருவதற்காகக் காத்திருந்த நேரத்தில் நான் மகாத்மா காந்தியடிகளுக்கு ஒரு சிறு கடிதம் எழுதினேன். அதன் சாரம் வருமாறு:

"எனக்கு மூன்று மாத வெறுங்காவல் தண்டனையே கொடுத்திருக்கிறார்கள். அது மிகவும் சொற்ப தண்டனை. ஆயினும் தாங்கள் ஜனவரி மாதத்துக்குள் சுயராஜ்யத்தைப் பெற்றுவிடுவீர்கள் என்று நம்புகிறேன். அதனால் எவ்வளவு தண்டனை கொடுத்தால் என்ன? நான் விடுதலை பெற்று வெளியே வருவதற்குள் தாங்கள் சுயராஜ்ய வேலையை முடித்துக் கொண்டு தாங்கள் வழக்கமாகச் செய்யும் உணவு ஆராய்ச்சி வேலையில் இறங்கிவிடுவீர்கள் என்று எண்ணுகிறேன்."

எங்களைச் சிறைக்கு ஒரு மோட்டார் காரிலேயே கூட்டிக் கொண்டு போனார்கள். எங்களுடன் கிருஷ்ணமாச்சாரியும் வந்தார். ஆர்ப்பாட்டங்கள் எதுவுமில்லாமல் போய்ச் சேர்ந்தோம். சேர்ந்ததும் சிறை வாயிலில் என்னை எடை போட்டார்கள்.



நான் என்னுடைய சிறு பையில் பற்பொடியும், கிராம்பும், ஒரு குயர் கடுதாசியும், குண்டூசிகளும், பென்சில்களும், ஒரு பௌண்டன் பேனாவும் கொண்டு போயிருந்தேன். அத்துடன் பவுண்டன் பேனாவுக்காக 'ஸ்வான்' மையும், ஒரு கூஜாவும், ஒரு சிறு பித்தளைக் குவளையும் வைத்திருந்தேன். என்னிடம் சில புஸ்தகங்களும் இருந்தன. கிறிஸ்துவ வேதம், ஷேக்ஸ்பியர் நாடகங்கள், தாயுமானவர் பாடல்கள், மகாபாரதத் தமிழ் மொழி பெயர்ப்பு, பி. சி. ராய் எழுதியுள்ள மகாபாரதம் ஏழு பாகங்கள், ராபின்சன் க்ருஸோ, —இவைதான் நான் கொண்டுபோன நூல்கள். தூரத்துப் பார்வைக்கான கண்ணாடியும், படிப்பதற்கான கண்ணாடியும் என்னிடமிருந்தன. படுப்பதற்காக ஒரு ஜமுக்காளமும் ஒரு தலையணையும் ஒரு போர்வையும் கொண்டு போயிருந்தேன். என் வேஷ்டி முதலியவைகளை யெல்லாம் படுக்கைக்குள் வைத்துச் சுற்றி



யிருந்தேன். எனக்குப் பருக்கள் கண்டிருந்ததால் ஒரு புட்டியில் மருந்தும், எனக்கு ஆஸ்த்மா வியாதி உண்டாதலால் அதற்குரிய மருந்தும் கொண்டு போனேன்.

எங்களைத் தனிக் கொட்டடியுள்ள பகுதிக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள். சிறைத் தலைமை அதிகாரி வந்து கேட்டார்:

''வியாதியஸ்தர் என்றது தாங்கள்தானா?''

''என்னை வியாதியஸ்தன் என்று எழுதியிருக்கிறார்கள்? ஆம், நான்தான்.''

''எப்படி எழுதியிருக்கிறார்களோ அறியேன். ஆனால் தாங்கள் ஒரு பாட்டிலில் மருந்து கொண்டு வருவதைப் பார்த்தேன், அதனால் வியாதியஸ்தர் என்று எண்ணினேன்.''

நான் அவரிடம் என் ஆஸ்த்மா வியாதியின் கஷ்டத்தைப் பற்றிக் கூறினேன். அதன்பின் என் பருக்களைப் பற்றியும் சொன்னேன்.

''தாங்கள் பரு மருந்தைத் தவிர மற்றவைகளை யெல்லாம் வைத்துக் கொள்ளலாம்'' என்று கூறினார்.

நாங்கள் சிறைக்கு வருமுன் சேஷ ரெட்டி என்பவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தோம். இப்போது அவர் மாவு அரைத்துக்கொண்டிருப்பதைக் கண்டோம். நெல்லூரிலிருந்து வேறு சில ஒத்துழையாமைக்காரர்களும் வந்திருந்தார்கள். அவர்களுக்குக் கடுங்காவல் தண்டனை கொடுத்திருந்தார்கள். அவர்கள் பழைய கிழிந்துபோன ரோமங்களைப் பிய்த்துக் கயிறுகத் திரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முகத்தில் சந்தோஷமே காணப்பட்டது. சேஷ ரெட்டி நல்ல கட்டான தேகமுடையவர். பீமசேனர் என்றுகூடச் சொல்லலாம். தைரியமானவர். தெய்வபக்தி உள்ளவர். சமீபத்தில் சிறை அதிகாரிகள் அவரை அடித்ததால் உண்டான காயங்கள் இன்னும் ஆறவில்லை. நாராயணவரத்தைச் சேர்ந்த ரங்கம் செட்டியாரையும் பார்த்தோம். அவர் வாசித்துக் கொண்டிருந்தார்.



நாங்கள் வசிக்க வேண்டியிருந்த அறைகள் தனிக் கொட்டடி. மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதிகள் இருக்கக் கூடியவை. அதில் நாங்கள் பத்து நாட்கள் தங்க வேண்டும் என்று கூறினார்கள்.

இயற்கைக் கடனைக் கழிக்கப் போனால் தண்ணீர் கிடையாது. அதை எதிர்த்து சேஷ ரெட்டி போராடியதாகவும் அதன் காரணமாகவே அப்போது தண்ணீர் கிடைத்தது என்றும் அறிந்தேன்.

ரங்கம் செட்டியார் ஒரு மண் பானையும் ஒரு மண் தட்டும் வைத்திருந்தார். எங்களுக்கு அலுமினியக் குவளையும் தட்டும் கொடுத்திருந்தார்கள். நான் அவற்றைக் கழுவி வைத்துக் கொண்டு சாதம் குழம்பு உண்டேன். முள்ளங்கிக் கிழங்கையும் கீரையையும் கொண்டு அந்தக் குழம்பைச் செய்திருந்தார்கள். என்னால் அவ்வளவு சாதம் சாப்பிட முடியாது. ஆனால் நன்றாய் உண்பவர்களுக்கு அந்த அளவு போதாது.

வயதான உதவிச் சிறை அதிகாரி ஒத்துழையாமைக்காரர்கள் கஷ்டம் தருவதாகக் கூறினார்.

''நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்? குற்றவாளிகளுக்காக வல்லவா சிறையை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். நீங்கள் வருவதால் என்ன பயன் விளைந்து விடும் என்று எண்ணுகிறீர்கள்?'' என்று என்னைக் கேட்டார்.

''என்ன விளைந்துவிடுமா? ஜனவரி மாதத்துக்குள் சுயராஜ்யம் கிடைத்து விடும். அதன் பின் எல்லோரும் யோக்கியர்கள் ஆகி விடுவார்கள்'' என்று நான் பதில் கூறினேன்.

சிறைவாசம் சந்தோஷமாகவே தோன்றுகிறது. வெளியி லிருப்பவர்கள் தான் பயப்படுகிறார்கள். எங்களை மாலை 5–45 மணிக்கே அடைத்து விட்டார்கள். அறைக்குள் வைத்து வெளியே பூட்டிச் சாவியை எடுத்துக்கொண்டு போகும் எனது முதல் அநுபவம் இதுவே. அதனால் எனக்கு என்னவோ மாதிரி இருந்தது.




இஸ்லாம் கூறும் 'ஜன்னத்'தோ அல்லது ஹிந்துக்கள் கூறும் சொர்க்கமோ சென்று முகாமிட்டிருக்கும் ஜனாப் மகாத்மா காந்தி சாஹேப் அவர்களுக்கு அல்லாவோ அல்லது ஆதிபகவனோ மேற்பார்த்து இக்கடிதத்தைத் தரவும்.

பாபூ !

என் அம்மா கூறுகிறாள், நீங்கள் ஜன்னத்துக்குப் போய் அல்லாவின் அருகில் இருப்பதாக. கோபாலனின் அன்னை கூறுகிறாள், நீங்கள் சொர்க்கத்தில் பகவானின் அன்பனாகி அவருடன் ஒன்றிவிட்டதாக. யார் சொல்வது உண்மை என்று தெரியாது. அதனால் தான் மேற்படி முகவரிக்கு நான் இக்கடிதத்தைப் போடுகிறேன். ஒரு வேளை 'ஜன்னத்' சொர்க்கம் இரண்டும் ஒரே இடத்தின் பெயராக இருக்கலாம். பனாரஸைக் காசி என்பது போல; அலகாபாத்தைப் பிரயாகை என்பது போல. நீங்கள் எங்கு இருந்தாலும் இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைத்துவிடும் என்று நம்புகிறேன்.

என் பெயர் அன்வர். எல்லோரும் என்னை 'அன்னூ' என்று கூப்பிடுகிறார்கள். எங்கள் சொந்த வீடு பானிபத்திலே கர்னால் ஜில்லாவிலே பஞ்சாப் மாநிலத்திலே இருக்கிறது. எங்கள் அப்பா — அக்பர் அலி என்று பெயர் அவருக்கு — தில்லியில் அரசாங்க அலுவலகத்தில் வேலை பார்த்து வந்தார். எனக்கு வயது ஆறரை. எங்கள் அம்மா பெயர் ஃபாதிமா. ஆனால் எல்லோரும் அவளை 'பீதோ' என்று தான் கூப்பிடுகிறார்கள். எனக்கு ஒரு பாட்டி அதாவது அம்மாவுக்கு அம்மா இருக்கிறாள். அவள் உங்களைப்போல் வயதானவள். வாயில் பல்லே கிடையாது. வெற்றிலை போட்டுக் கொள்வதுகூட உரலில் இடித்துவிட்டுத்தான் போட்டுக் கொள்ளுகிறாள். எங்கள் குடும்பம் பானிபத்தில்தான் இருந்தது. அப்பா மட்டும் உத்தியோகம் காரணமாகத் தில்லியில் இருந்தார். பார்பர் ரோட்டுக்குக் கிட்டத்தில் ஒரு குவார்ட்டரில்.

எங்கள் அப்பாவுக்கு உங்களைப் பற்றி நல்ல அபிப்பிராயம் கிடையாது. காந்தி முஸல்மான்களுக்கு எதிரி என்று அடிக்கடி சொல்லி வந்தார். அம்மாகூட அப்பா மாதிரிதான் சொல்லிக் கொண்டிருந்தாள். அதனால் நானும் உங்களை நல்லவர் என்று நினைக்கவில்லை. ஆனால் பாட்டி மட்டும், காந்தி ஆண்டவனின் ஆள். எல்லோரையும் அவர் உடன்பிறந்தவர்களாகக் கருதுகிறார் என்று கூறி வந்தாள். அவர் ரொம்ப நாளைக்கு முன்னால் ஒரு முறை உங்களைப் பார்த்திருக்கிறாளாம். பானிபத்துக்குக் கிலாபத் கமிட்டி விஷயமாக நீங்கள் ஒரு முறை வந்திருந்தீர்களாம். அப்பொழுது பெண்கள் கூட்டம் ஒன்றில் பேசவும் பேசினீர்களாம். அது முதல் அவள் கதர்தான் அணிகிறாள். வாய்க்கு வாய் உங்களை நல்லவர் என்கிறாள். ஆனால் அப்பா என்ன சொல்லுவார், தெரியுமா? 'கிழவி ஒரு மக்கு. அவளுக்குப் பெரிய விஷயங்களைப் பற்றியெல்லாம் என்ன தெரியும்?' என்பார்! அப்பா அலிகட் கல்லூரியில் படித்தவர். தினமும் பத்திரிகை படிப்பார். அதனாலே நாங்கள் அவர் பேச்சுக்கு மிகுந்த மதிப்புக் கொடுப்போம். உங்களைப் பற்றிப் பேச்சு வரும்பொழுதெல்லாம் உங்களைத் தியவர் என்று கூறிக் கேலி செய்வார், உங்களைக் கோவணாண்டி என்றெல்லாம் கூறுவார். வெற்று உடம்புடன் உங்களைப் பார்க்கும்பொழுது எங்களுக்கும் சிரிப்பாக வரும்.

அது கிடக்கட்டும். இந்தியாவை இரண்டாகப் பிரிக்கப் போகிறார்கள் என்று நாங்கள் கேள்விப்பட்டோம். எங்கள் தாத்தா செத்துப் போன பிறகு அப்பாவும் பெரியப்பாவும் இப்படித்தான் இரண்டாகப் பிரித்துக் கொண்டார்கள். நாங்கள் தெரு வீதிகளில் 'பாகிஸ்தான் வாழ்க' என்று கோஷமிட்டுத் திரிந்தோம். பானிபத்தில் முஸல்மான்கள்தான் அதிகம். ஹிந்துக்கள் வெகு குறைவு. அதனால் நாங்கள் ஹிந்துக்களுக்கெதிரே விறைப்பாக நடப்போம். வைசியப் பிள்ளைகளுக்கெதிரே

உரத்த குரலில், 'பாகிஸ்தான் ஜிந்தாபாத்!' என்று கோஷமிடுவோம். அவர்கள் காங்கிரஸ் பெயரையோ அல்லது தங்கள் — அதாவது காந்தி — பெயரையோ கூறினால், அவர்களை அடிக்கக்கூடச் செய்வோம். ஆனால் பாகிஸ்தான் ஏற்பட்ட பிறகு, பானிபத் பாகிஸ்தானில் சேரவில்லை என்று கேள்விப்பட்டோம். அப்புறம் நாடு முழுவதும் அடிதடியாகி ஒரே ரணகளமாகிவிட்டது என்றும் செய்தி வந்தது. அப்பா டில்லியிலிருந்து பானிபத்துக்கு வரும்பொழுதெல்லாம் பாகிஸ்தானில் ஹிந்துக்கள் முஸ்லிம்களை அடிப்பதாகக் கூறுவார். அதனால் நான் ஹிந்துக்களை மேலும் வெறுக்கலானேன். ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் என் அறிவுக்கு எட்டவில்லை. பாகிஸ்தானிலோ முஸல்மான்கள் அதிகம், ஹிந்துக்கள் குறைவு. அங்கே ஹிந்துக்கள் முஸல்மான்களை எப்படி அடிக்க முடியும்? நாங்கள், அதாவது முஸ்லிம்கள் பாதுஷாக்களின் சந்ததிகளான நாங்கள்தானே அடிதடியில் முன் நிற்க முடியும்? பஞ்சாபிலும் எல்லைப்புற மாகாணத்திலும் முஸல்மான்கள்தானே பெருவாரியானவர்கள். அங்கே ஹிந்துக்களை முஸ்லிம்கள் அடித்திருக்கலாமல்லவா? கட்டாயம் அடித்திருப்பார்கள். ஆனால் நான் குழந்தை. எனக்கென்ன தெரியும்? என் கணக்குத் தவறாகவும் இருக்கலாம் அல்லவா? அப்பா படித்தவர்; நாலும் தெரிந்தவர். அவர் சொல்வது மெய்யாயிருக்கலாம் அல்லவா? அதனால் நான் பேசாமல் இருந்தேன். இருந்தாலும் இந்த விஷயம் என் மனத்தில் உறுத்திக் கொண்டேயிருந்தது.

அப்புறம் டில்லியில் அடிதடி ஆரம்பமாகி விட்டது. பானிபத்தில் இருந்த முஸல்மான்கள் பாகிஸ்தானுக்கு ஓடிவிட முயன்றனர். ஆனால் என் அப்பா போகத் தயாராயில்லை. விஷயம் என்ன தெரியுமா? எங்கள் அப்பா கொஞ்சம் கருமி. தம் சொத்து, சுதந்திரம், வீடு வாசல், நிலம்—நீச்சு இவற்றை விட்டு விட்டுப் போக விரும்பவில்லை. 'எல்லாப் பொருள்களையும் சிறுகச் சிறுக நல்ல விலைக்கு விற்றுவிட்டுப் போவோம்' என்றார் அவர். ஆனால் அதற்குள் பஞ்சாபிலிருந்து ஓடி வந்த பல ஹிந்துக்களும் சீக்கியர்களும் பானிபத்துக்கு வந்தனர்; ஆயிரக்கணக்கில் லட்சக்கணக்கில். அவர்கள் எல்லாருக்கும் இருக்க இடம் தேவைப்பட்டது. அவர்களுடைய வீடுவாசல்களை மேற்கு பஞ்சாபைச் சேர்ந்த முஸல்மான்கள் கொள்ளையடித்துவிட்டார்கள்; குழந்தை குட்டிகளைக் கொன்று குவித்து விட்டார்கள். அதனால் இவர்கள் எல்லோரும் முஸல்மான்களைக் காணவே வெறுத்தனர். எனவே, பானிபத்தில் முஸ்லிம்கள் வாழ்வது மிகச் சிரமமாகிவிட்டது. சிலர் போலீஸாரின் கையில் அடிபட்டு மரித்தனர். பாகிஸ்தானிலிருந்து மோட்டார்களும் லாரிகளும் எங்களை அழைத்துப் போக வரும் என்று நாங்கள் தினமும் எதிர்பார்த்தோம். ஆனால் எதுவுமே வரவில்லை. ஆனால் வரவர ஆபத்து அதிகமாகிவிடவே, அம்மா அப்பாவுக்குத் டில்லி முகவரிக்குக் கடிதம் எழுதினாள். அவர் அங்கிருந்து இராணுவ லாரியை எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். நாங்கள் தேவைப் பொருள்களை மட்டும் எடுத்துக் கொண்டு அந்த லாரியில் டில்லிக்கு வந்து சேர்ந்தோம்.

இப்பொழுது நான் என் துப்பாக்கியைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். அந்தத் துப்பாக்கி ரொம்ப ரொம்ப அழகு. பளிச்சிடும் குழல், மழுமழுப்பான மரப் பட்டை, விசையை அழுத்தினால் 'கடாக்' என்னும் ஒலி! எல்லாமே அழகு! எனக்கு ஐந்தாவது பிறந்த நாள் பரிசாக அப்பா அதை வாங்கித் தந்திருந்தார். 'இப்பொழுதே துப்பாக்கி



கூடப் பழகிக் கொண்டால், பெரியவனாகும் பொழுது நீ சிறந்த வீரனாகலாம்' என்று கூறி ஊக்கினார். உண்மையில் இது விளையாட்டுத் துப்பாக்கிதான். ஆனால் விளையாட்டுதானே வினையாகிறது. நான் அதைத் தோளில் சாத்திக் கொண்டு, தெருப் பையன்களையெல்லாம் கூட்டிக் கொண்டு 'பரேட்' கூட நடத்தினேன். ஆம், அது எங்கள் பாகிஸ்தானியப் படை!

ஆமாம், முன்னாலே என்ன சொன்னேன்? பானிபத்தை விட்டுப் புறப்படும்பொழுது நாங்கள் எத்தனையோ வீட்டுச் சாமான்களையெல்லாம் விட்டுவிட்டுப் புறப்படும்படியாயிற்று என்றுதானே? அப்பாவின் புத்தகங்கள், அம்மாவின் பாத்திரங்கள், துணிமணிகள், போர்வை – ரஜாயி எல்லாமே தங்கிவிட்டன. இரண்டொரு உடுத்தும் துணிகளை மட்டும் தான் எடுத்துக் கொள்ள முடிந்தது. ஆனால் நான் மட்டும் என் துப்பாக்கியை யாருக்கும் தெரியாமல் எடுத்துக் கொண்டேன்! ஏனென்றால் துப்பாக்கி இருந்தால்தானே நான் 'காபிர்'களைப் பழி வாங்க முடியும்? அவர்கள் ஏன் எங்களைப் பானிபத்திலிருந்து விரட்டினார்கள்?

தில்லியில் நாங்கள் பத்துப் பன்னிரண்டு நாட்கள் ஓர் அறையில் அடைந்து கிடந்தோம். ஏனென்றால் இங்கே முஸல்மான்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்தார்கள். இதைக் கேட்டதும் எங்கள் முகம் எல்லாம் வெளிறிப் போய்விட்டது. இந்த நிலையில் தான், நீங்கள் கல்கத்தாவிலிருந்து வந்திருப்பதாகவும் முஸல்மான்களைக் காப்பாற்ற முயன்று கொண்டிருப்பதாகவும் கேள்விப்பட்டோம். போன உயிர் திரும்பி வந்தாற் போலிருந்தது. முதலில் அப்பா இந்த காந்தி ஏதோ சூழ்ச்சி செய்கிறார் என்று தான் கூறிக் கொண்டிருந்தார். ஆனால் பிற்பாடு, நீங்கள் உண்மையாகவே முஸல்மான்களைக் காப்பாற்றப் பெரும் பாடுபடுகிறீர்கள் என்பதை ஒப்புக் கொண்டார். தில்லியில் கொஞ்சம் அமைதி நிலவியது. ஆனால் வழியில் பரத்பூர் சமஸ்தானத்தில் ரயில் வண்டிகள் சூறையாடப்படுகின்றன; முஸல்மான்கள் கொல்லப்படுகின்றனர் என்று கேள்விப்பட்டோம். அதனால் அப்பாவுக்கு பம்பாய்க்கு மாற்றலாகியது. நாங்கள் ஆகாய விமானத்தில் இங்கு வந்து சேர்ந்தோம்.

பம்பாயில் எங்களுக்கு இருக்க இரண்டு அறைகள் கிடைத்தன, சிவாஜி பார்க் பகுதியில். அங்கே எங்களைச் சுற்றிலும் ஹிந்துக்கள் தான் வசித்து வந்தார்கள். நாங்கள் முதலில் யாராவது நம்மை அடித்துப் போடாமல் இருக்க வேண்டுமே என்று பயந்தோம். ஆனால் பாட்டி மட்டும் கொஞ்சம்கூடப் பயப்படவில்லை. அவள் 'பர்கா' அணிந்து கடற்கரையில் வெகுதூரத்துக்கு வெகுதூரம் போய் வந்தாள். 'ஹிந்துக்களும் சீக்கியர்களும்கூட ஆண்டவனின் அடிமைகள்தானே? இந்தக் கிழவியை யாரும் கொல்லமாட்டார்கள். பயப்படாதீர்கள்!' என்று கூறுவாள்.

எங்கள் பக்கத்து வீட்டில் ஹிந்துக்கள் வசித்து வந்தார்கள். கோபாலனின் அப்பா– அம்மாதான்! கோபாலனுடைய சித்தப்பா ஒரு தீவிர ஹிந்து. சங்கத்தார்களுடன் சேர்ந்து அவர் 'பரேட்'கூடச் செய்வது உண்டு. அவர் தம் வீட்டுக் குழந்தைகளுக்குச் சொல்லி வைத்திருந்தார், 'முஸல்மான்கள் மிகவும் கெட்டவர்கள். அவர்களைக் கண்ட இடத்தில் கொன்று போட வேண்டும்' என்று! அதனால் கோபாலன் தன் வீட்டில் ஒரு ஹிந்துப் படையையே தயார் செய்து வைத்திருந்தான். மரக் கத்திகள், வாள்கள், ஒரு தகரக் கைத் துப்பாக்கி, அம்பு – வில் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு அவர்கள் தினமும் பரேட் செய்வார்கள். 'ஹிந்துக்கள் ஆட்சி அமைப்போம்! முஸல்மான்களை அடித்து விரட்டுவோம்!' என்று கோஷமிடுவார்கள். இடையிடையே 'ஹர ஹர மகாதேவ்' போன்று வேறு பல கோஷங்களும் செய்வார்கள். நான் அவர்களுக்கு எதிராகப் பாகிஸ்தானியப் படை கூட்டினேன். கோபாலனின் படையில் பத்துப் பன்னிரண்டு குழந்தைகள் இருந்தார்கள். நாங்கள் நால்வர்தான் இருந்தோம். ஆயினும் அஞ்சவில்லை. அப்பா சொல்வது போல் ஒரு முஸ்லிம் நான்கைந்து ஹிந்துக்களுக்குச் சமம் என்பது ஒன்று. இரண்டாவது என்னிடத்தில் பெரிய துப்பாக்கி இருந்தது. அவர்களிடத்திலோ வெறும் மரக்கத்திகளும், அம்பு விற்களும்தான்! எனவே, சண்டை என்று வந்தால் நாங்கள் நன்றாக அவர்களைப் புடைக்க முடியும். அவர்கள் 'ஹர ஹர மகாதேவ்' என்றால் நாங்கள் 'அல்லாஹோ அக்பர்' என்று கூச்சலிடுவோம். 'ஹிந்து ராஜ்யம் அமைப்போம்' என்று அவர்கள் கூறினால், 'பிரித்தவண்ணம் பெற்றோம், பாகிஸ்தான்! சண்டையிட்டுப் பெறுவோம் ஹிந்துஸ்தான்!' என்று நாங்கள் கொக்கரிப்போம். நாலுபுறமும் ஹிந்துக்கள் இருக்கிறார்கள். இப்படியெல்லாம் பேசப்படாது என்று அப்பா தடுப்பார். அம்மா – பாட்டிகூட அதட்டுவார்கள். ஆனால் நாங்கள் கேட்டால்தானே? ஒருநாள் கோஷமிட்டவண்ணம் கோபாலனும் அவன் படையினரும் எங்கள் வீட்டை முற்றுகையிட்டுவிட்டார்கள். புத்துவுக்குக் காயம்கூடப் பட்டுவிட்டது. நான் என் துப்பாக்கியைக் காட்டி எல்லோரையும் மிரட்டி விரட்டினேன்.

எங்கள் இந்தியப் படையினருக்கும் பாகிஸ்தானியப் படையினருக்கும் பயங்கரப் போர் நிகழ்ந்து கொண்டிருந்தபொழுது, நான் மோகனை முதல் முறையாகப் பார்த்தேன். அவன் எங்கள் சண்டையைப் பிதுங்கும் விழிகளுடன் பார்த்துக் கொண்டிருந்தான். இது போன்ற சண்டையை முன்னும் அவன் பார்த்திருப்பான் போலிருந்தது. அவன் கூச்சலிடவில்லை. ஆனால் அவன் விழிகளிலிருந்து நீர் பொட்டுப் பொட்டென்று உதிர்ந்தது. கோபாலனின் படையை விரட்டியடித்த பின் நான் மோகனிடம் சென்று, ''ஏன் தம்பி! நீ யார்? ஹிந்துவா, முஸ்லிமா?'' என்று கேட்டேன். அவன் கமீஸ்–ஷல்வார் அணிந்து எங்கள் வீட்டுக்கு இடையே இருந்த மொட்டைச் சுவரில் அமர்ந்து பேசாமல் பிழியப் பிழிய அழுது கொண்டிருந்தான். அவன் ஷல்வாரைப் பார்த்து நான் முஸ்லிமாயிருப்பானோ என்று எண்ணினேன். ஆனால் அவன் பதில் ஏதும் சொல்லவில்லை. விழி பிதுங்கப் பிதுங்கப் பார்த்துக் கொண்டிருந்






# ஒரு புதிய மோட்டார் சைக்கிளின் இந்த "கியர்" உறுப்பின் பற்கள் ஆறு மாதத்திற்குள்ளேயே உடைந்து விட்டன

## ஒரு "யூடெக்டிக்"கினால் புதுப்பிக்கப்பட்டு, 2 ஆண்டுகளுக்கு மேலாகியும் ஒரு குறைபாடும் இல்லாது, திறமையுடன் பணியாற்றுகின்றன.

"யூடெக்டிக் அல்லாய்" உபயோகித்து, ரிப்பேர் செய்த செலவு ரூ. 4/-தான் ஒரு புதிய "கியர்" விலை ரூ. 120/-

யூடெக்டிக்கின், குறைவான உஷ்ணத்தைச் செலுத்தி உபயோகிப்பதின் மூலம் (Low Heat Input Process) ரிப்பேர்கள் உறுதியாகவும் மிகத்திறமையாகவும் செய்யப்படுகின்றன. வெடிப்புகளைப் பற்றவைக்கவும் தேய்ந்துபோன பாகங்களை புதுப்பிக்கவும், வெவ்வேறான உலோகங்களை ஒட்டவைக்கவும், "யூடெக்டிக்" அல்லாய்களை உபயோகிக்கவும். குறைந்த சேதாரம், குறைந்த வடுக்கள், குறுகிய ரிப்பேர் காலம்.

இன்றே ஒரு முக்கியமான முடிவுக்கு வாருங்கள். பழுதடைந்த உறுப்புகளுக்கு பதிலாக புதிய உறுப்புகளை வாங்குவதைவிட, அவைகளையே ரிப்பேர் செய்வதென தீர்மானம் செய்யுங்கள். உபயோகத்திற்கு இனிமேல் லாயக்கற்றதென குப்பையில் போடப்பட்ட, தேய்ந்துபோன உறுப்புகளைப் பொறுக்கி எடுத்து, அவைகளை லாபகரமான வழியில் உபயோகப்படுத்துங்கள். "யூடெக்டிக்" கலப்பு எஃகின் உபயோகத்தினால் இது சாத்தியமாகக் கூடும். எமது நிபுணர்களை அழைத்து அவருடைய ஆலோசனைகளைக் கேளுங்கள். உங்களுடைய "வெல்டிங்" பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதில் அவர் தனித்திறமையுள்ளவர்.

**EUTECTIC**

*Low Temperature Welding Alloys*




தயாரிப்பவர்கள்:

**யூடெக்டிக் வெல்டிங் அல்லாய்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்**

யூடெக்டிக்கின் விவரங்களடங்கிய புத்தகத்திற்கு, இந்தியாவில் உள்ள கீழ்க்கண்ட பூரண விற்பனையாளர்களுக்கு தயவுசெய்து எழுதவும்:

**லார்ஸன் & டூப்ரோ லிமிடெட்**

தபால் பெட்டி 278, பம்பாய்-1 தபால் பெட்டி 619, கல்கத்தா-16
தபால் பை 5247, சென்னை-2 தபால் பெட்டி 323, புது தில்லி-1

தான். அவன் கண்களைக் காணப் பயமாயிருந்தது. 'இவன் பைத்தியமாயிருப்பானோ? அல்லது ஊமையாயிருப்பானோ?' என்று நான் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் பொழுதே கோபாலன் வந்து விட்டான். 'பாவம், இவனைப் போட்டு ஏன் அடிக்கிறாய்? இவன் பஞ்சாபிலிருந்து வந்திருக்கிறான். இவன் அப்பா—அம்மாவை அங்கே கொன்று போட்டுவிட்டார்கள். இங்கே இவன் தன் சொந்தக்காரர்கள் வீட்டிலிருக்கிறான்!' என்றான்.

அதைக் கேட்டபின் எனக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. துப்பாக்கி விளையாட்டில் மனமே செல்லவில்லை. இரவு கனவில் மோகனின் பயங்கரமான பிதுங்கும் விழிகள் கண்முன் தோன்றின. நான் பயந்து போய்த் தூக்கத்தில் அழலானேன்.

அன்று முதல் மோகன் பெரும்பாலும் மொட்டைச் சுவரில் உட்கார்ந்து எங்கள் விளையாட்டைப் பிதுங்கும் விழிகளோடு பார்க்கலானான். அவன் எங்களோடு விளையாடுவதில்லை; கோபாலனுடனும் விளையாடுவதில்லை. பேசாமல் தன்னந் தனியாக உட்கார்ந்திருப்பான். அவன் விழிகள் என்ன பயங்கரக் காட்சியைக் கண்டனவோ, அவன் வாய் அடைத்துப் போய்விட்டது.

நீங்கள் உண்ணாவிரதம் இருப்பதாக ஒருநாள் வானொலியில் கேட்டோம். ஹிந்து—முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்வதை நிறுத்தும் வரையில் நீங்கள் உண்ணாவிரதம் மேற்கொள்ளப் போவதாகக் கூறினார்கள். அதைக் கேட்டுப் பாட்டி கண்ணீர் விட்டு அழுதே விட்டாள். இரண்டு வேளை அவள் சாப்பாட்டைத் தொடவே இல்லை. ஹிந்துக்களில் நல்ல மனிதர் உண்டு என்றால் அது காந்திதான் என்று அப்பாகூடச் சொல்லுவாரே. பாட்டியைப் பார்த்து நான் கூட ஒரு நாள் பால் குடிக்கவில்லை; பகல் உணவு சாப்பிடவில்லை. ஆனால் பொழுது சாயச் சாய என் நிலை பரிதாபமாகிவிட்டது. விளையாட்டிலும் மனம் செல்லவில்லை; படிக்கவும் ஓடவில்லை. கண்களெதிரே லயாம் நாட்டுப் புலால் புலாவ், அரிசிப் பாயசம் என்று ஒவ்வொன்றாக வந்து பளையக் கிளப்பி விட்டன. அப்பொழுதுதான் நீங்கள் எப்படி உணவு — தண்ணீர் இன்றி இருக்கிறீர்கள் என்று தோன்றியது.

நீங்கள் பல நாட்கள் விடாப்பிடியாகப் பட்டினி கிடக்கவே, நாட்டில் உள்ள ஹிந்து—முஸ்லிம்கள் அனைவரும் இனி தாங்கள் சண்டையிடமாட்டோம் என்று மண்டியிட்டு வேண்டுவதாகக் கேள்விப்பட்டோம். நாங்களும் உடனே எங்கள் பாகிஸ்தானியப் படையையும் ஹிந்து சேனையையும் கலைத்து அந்த விளையாட்டு விளையாடுவதை நிறுத்திக் கொண்டோம். துப்பாக்கி, வாள், அம்பு—வில் எல்லாவற்றையும் ஒடித்துக் கடலில் கடாசிவிடுவதாக முடிவு செய்தோம்.

முதல் தடவையாக மோகனின் விழிகளில் மகிழ்ச்சிக் குறி தென்பட்டது. யாரோ மந்திரம் போட்டு இந்த அற்புதத்தை நிகழ்த்தினாற்போல எனக்குத் தோன்றியது.

அடுத்த நாள் அப்பாவும் வாயெல்லாம் பல்லாக வந்து, ''டில்லியில் அற்புதம் நிகழ்ந்து விட்டது. ஹிந்து — முஸ்லிம் — சீக்கியத் தலைவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி இனிச் சண்டையிட மாட்டோம் என்று காந்திஜியிடம் மண்டியிட்டுக் கூறிவிட்டார்கள். முஸல்மான்களுக்கு மசூதி மீண்டும் கிடைத்துவிட்டது. டில்லிக் கடைத் தெருக்களில் முஸ்லிம்கள் கள தைரியமாக மகிழ்வோடு வளைய வருகிறார்களாம். காந்தியடிகள் தம் உபவாசத்தை முடித்துவிட்டார். காஜா குதுபுத்தீனின் மஜாரி (சமாதி)ல் 'உர்ஸ்' கொண்டாடக்கூடச் சென்றாராம்!'' என்றார்.

இதற்கு ஒரு நாள் முந்திதான் நான் என் துப்பாக்கியை உடைத்தெறிவது என்றும்



## சுதந்திரத் திருநாள்

உலகத்தின் ஏனைய சுதந்திர நாடுகளுடன் அடி எடுத்து வைத்து நடக்கத் தொடங்கியது முதல், நமது மக்களுக்கு அரசியல் சுதந்திரம் குறிக்கும் சுதந்திரங்களைக் காட்டிலும் மேலான சிறந்த சுதந்திரத்தைத் தர நாம் முயன்று வருகிறோம். காந்தியடிகள் ஒரு சமயம் 'நான் இந்நாட்டின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்கும் பல முறை பயணம் மேற்கொண்டிருக்கிறேன். மக்களின் ஒளியிழந்த கண்கள் மனிதத் தன்மையையே பரிகசிக்கும் பல துயரக் கதைகள் கூறுவதைக் கேட்டிருக்கிறேன். ஆயினும் சின்னஞ் சிறு குடிசைகளிலே சாணக் குவியல்களுக்கிடையில் வாழும் நாட்டுப்புற மக்களும் எத்தனை அறிவிற் சிறந்தவர்களாயிருக்கிறார்கள் என்பதைப் பேசக் கொடுத்தால் அறிவீர்கள். இதில்தான் இந்தியாவின் பெருமை இருக்கிறது!' என்றார். காந்தியடிகள் நம் மக்கள் உலக வாழ்க்கையில் வறுமையில் உழன்றாலும், எத்தகைய ஆன்மிகச் செல்வத்தைப் பெற்றிருக்கிறார்கள் என்று சுருக்கக் கூறி உணர்த்தி விட்டார். உலக வாழ்க்கையில் காணப்படும் வறுமையை அகற்றி ஆன்மிகச் செல்வத்தை வளர்ப்பதே நம் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

(ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன், 14-8-62ல் நாட்டுக்கு விடுத்த செய்தியிலிருந்து)

---

கோபாலன் தன் அம்பு – வில்லை முறித்தெறிவது என்றும் தீர்மானித்திருந்தோம். ஆனால் பளபளக்கும் துப்பாக்கியைக் கையில் எடுத்துப் பார்த்த பொழுது அதை உடைக்க எனக்கு மனம் வரவில்லை. கோபாலனும் இதே போலத் தன் அம்பையும் வில்லையும் கைத் துப்பாக்கியையும் முறித்துப் போடாமல் இருக்கலாம் அல்லவா? யார் கண்டார்கள்? நானும் ஏன் என் துப்பாக்கியை வைத்துக் கொள்ளக் கூடாது? நான் என்ன அதைக் கொண்டு சுடக்கிடப் போகிறேனா? ஆபத்து சமயத்துக்கு அது பாட்டில் இருந்துவிட்டுப் போகட்டுமே!' என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன்.

கோபாலனும் நான் நினைத்ததுபோலவே தான் எண்ணியிருக்கிறான். 'அன்றோ தன் துப்பாக்கியை ஒடித்து எறியாமல் இருக்கலாம் அல்லவா ? நான் மட்டும் என் துப்பாக்கியையும் அம்பு–வில்லையும் எதற்காக இழக்க வேண்டும்?' என்று முடிவு கட்டிவிட்டான்.

உங்கள் மீது யாரோ குண்டு எறிந்தார்கள் என்னும் செய்தி கேட்டு எங்கள் இதயமே இடித்து போயிற்று. நீங்கள் மயிரிழையில் தப்பினீர்கள் என்று கேள்விப்பட்டு ஆண்டவனை வாயார மனமார வாழ்த்தினோம். குண்டு எறிந்தவனும் பிடிபட்டுவிட்டானாமே!

''கோபாலா! இது ரொம்பத் தப்பு! சில துஷ்டர்கள் காந்திஜியைக் கொல்ல நினைக்கிறார்களாமே!'' என்றேன் கோபாலனிடம்.

''நாம் காந்திஜியை எப்படியாவது காப்பாற்ற வேண்டும்!'' என்றான் கோபாலன்.

''எப்படி?'' என்று கேட்டேன் நான்.

''நாம் தில்லிக்குச் சென்று காந்திஜியின் வீட்டைக் காவல் புரிவோம்!'' என்றான் அவன்.

''எப்படிக் காவல் புரிவாய்? துப்பாக்கி, கத்தி எதுவும் இல்லாமல்....?'' என்றேன்.

''கைத்துப்பாக்கியும், அம்பு – வில்லும் இருக்கின்றனவே!'' அவசரத்தில் அவன் வாய் தவறிச் சொல்லிவிட்டான். அப்புறம் தன் தவற்றை உணர்ந்து வாயை மூடிக் கொண்டான். நானும் அவன் செய்த தவற்றையே ஓர் உணர்ச்சிவேகத்தில் செய்தேன்.

''கைத் துப்பாக்கியினால் சுட்டால் இரண்டொரு கஜ தூரம்தானே போகும்? நான் பெரிய துப்பாக்கியை வைத்துக் கொண்டு காவல் புரிகிறேனே!'' என்று கூறிவிட்டேன்.

அவன் என்னை உற்று நோக்கியவண்ணம், ''உன்னிடம் துப்பாக்கி எங்கிருந்து வந்தது?'' என்று கேட்டான்.

''உன்னிடம் கைத் துப்பாக்கி அம்பு–வில் வந்தாற் போலத்தான்!'' என்று நானும் பதில் சொன்னேன்.

அவனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ''இதற்குத்தான் முஸல்மான்களை நம்பக்கூடாது என்கிறது. துப்பாக்கியை ஒடித்தெறிவதாக நீ வாக்கு அளித்தாய் அல்லவா?'' என்று சாடினான்.

நான் மட்டும் என்ன, பேசாமல் இருப்பேனா ? அவனைப் போலவே கொதித்து எழுந்து, ''ஹிந்துக்களை மட்டும் நம்ப முடியுமோ? கைத் துப்பாக்கி–அம்பு வில் எல்லாவற்றையும் முறித்தெறிந்துவிடுவதாக நீ மட்டும் சொல்லவில்லையா?'' என்று கேட்டேன்!

'' போ ! உன்னோடு நான் விளையாட வரவில்லை !'' என்றான் அவன்.

''நானும் ஒன்றும் ஏங்கிச் சாகவில்லை, உன்னோடு விளையாட !'' என்று கூறிவிட்டு வீட்டுக்குத் திரும்பிவிட்டேன். வந்ததும் துப்பாக்கியைத் துடைத்து அதன் பாகங்களுக்கு எண்ணெய் போட்டேன். எப்பொழுது ஹிந்துப் படைகளை எதிர்க்க வேண்டி வருமோ, யார் கண்டது ?

என்னைப் போலவே கோபாலனும் அவன் தம்பியும் தங்கள் வீட்டில் மூங்கில் அம்புகளைச் சீவிச் சீவிக் கூராக்கிக் கொண்டிருந்தார்கள்.

இந்தத் தடவை, மொட்டைச் சுவரில் மோகனைப் பார்த்த போது, அவன் கண்களில் பழையபடியே துயரமும் துன்பமும் தோய்ந்திருப்பதைக் கண்டேன்.

பல நாட்கள் கடந்துவிட்டன.

மாலையில் நாங்கள் கடற்கரையில் கூடியிருந்த விழாக் கூட்டத்தைக் கண்டு களித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது அப்பா அலுவலகத்திலிருந்து ஓடி வந்தார். ''காந்திஜி இறந்துவிட்டார். யாரோ பைத்தியக்காரன் அவரைச் சுட்டுவிட்டான் !'' என்றார்.

முதலில் யாரும் நம்பவில்லை. காந்திஜி எப்படிச் சாவார் ? குண்டு போட்டுமே அவரைக் கொல்ல முடியவில்லையே என்று நாங்கள் எண்ணினோம். அப்புறம் சிந்தித்தோம். அவரை யாரும் சரியாகக் காவல் புரியவில்லை



## சுதந்திரத் திருநாள்

நமது ஒளி விளக்காக, தத்துவ ஞானியாக இருந்த மகாத்மா காந்திக்கு நாம் நமது அன்பும் மதிப்பும் கலந்த நன்றியையும் வணக்கத்தையும் இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறோம். நமது கலாசாரத்தைப் போற்றிப் பாதுகாத்த அவர், நமது பிறப்புரிமையான சுதந்திரத்தை நாம் பெற இணையற்றதும் தோல்வி காணாததுமான ஆயுதங்களை நமக்கு அளித்தார். சத்தியம், அஹிம்சை என்னும் நிராயுத சாதனங்களைக் கொண்டே விலைமதிப்பற்ற பரிசான சுயராஜ்யத்தை நமக்கு வாங்கித் தந்தார். எல்லாவற்றுக்கும் மேலாக ஆண்டவன்பால் நம்பிக்கை ஊட்டி நம் இலட்சியம் ஈடேற உதவினார்.

பல்லாண்டுகள் இடையறாப் போராட்டத்துக்குப் பின், இந்த நாட்டின் ஆட்சிப் பொறுப்பைப் பெற்ற நேரத்திலே நமது விதியைச் சமைத்து உதவிய பரம்பொருளை வழிபட்டு வந்தனை செய்வோமாக.

(சுதந்திர தினத்தன்று ராஜேந்திர பிரசாத் அரசியல் நிர்ணயச் சட்ட மன்றத்தில் பேசியதிலிருந்து)

---

என்ற முடிவுக்கு வந்தோம். இல்லாவிட்டால் அவர் அருகில் துப்பாக்கி சுடுபவன் எப்படிப் போக முடிந்திருக்கும்?

இரவு யாருமே உணவு அருந்தவில்லை. ரேடியோவுக்கு அருகில் அமர்ந்து செய்திகளைக் கேட்டுக் கொண்டிருந்தோம். பண்டித ஜவாஹர்லால் நேருவின் பிரசங்கத்தைக் கேட்டோம். அவ்வளவு பெரியவராயிருந்தும் அவர் அழுது கொண்டே பேசினார். அவர் பேச்சையும் அழுகையையும் கேட்டு எனக்கும் அழுகை வந்துவிட்டது. நான் ரொம்ப நேரம் வரை அழுது கொண்டிருந்தேன். பாட்டியும் அம்மாவும் செய்தி கேட்டது முதற்கொண்டே அழுதுகொண்டிருந்தார்கள். அப்பாவின் கண்களிலும் நீர் கோத்திருந்தது.

அன்று இரவு எனக்குச் சரியாகத் தூக்கம் வரவில்லை. பயங்கரக் கனவுகள் வந்து கொண்டேயிருந்தன. ஒரு சமயம் யாரோ உங்களைக் கொல்ல வருவது போலத் தோன்றியது. 'காந்தியைக் காப்பாற்று! அவர் உயிருக்கு ஆபத்து!' என்று நான் கூச்சலிட்டேன். ஆனால் யாருமே காதில் வாங்கிக் கொள்ளவில்லை. எல்லாவற்றையும் விடப் பயங்கரக் கனவு 'என்ன தெரியுமா? உங்களை யாரோ துப்பாக்கியால் சுடக் குறி பார்க்கிறான். அவன் கையில் என் துப்பாக்கி இருக்கிறது. அதிலிருந்து புறப்பட்ட குண்டு உங்கள் மேல் பாய்கிறது. என்னிடம் கோபித்துக் கொண்டுதான் நீங்கள் போய்விட்டதாகக் கருதித் துடித்துப் போய்விட்டேன்.

மறு நாள் ஹர்த்தால் நடந்தது. பள்ளிகள் அனைத்தும் மூடப்பட்டிருந்தன. விளையாட மனம் செல்லவில்லை. மொட்டைச்சுவருக்கு அருகில் போனால் மோகன் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தான்; அதுவும் உரக்கக் குரல் எழுப்பி! அவனைக் கண்டு எனக்கு மேலும் அழுகை வந்துவிட்டது. அப்புறம் கோபாலன் வந்தான். அவனும் அழுது கொண்டிருந்தான்.

''பாபூஜி இறந்துவிட்டார்!'' என்றான் கோபாலன்.

''ஆமாம், அம்மாவும் பாட்டியும் அவர் ஆண்டவனுக்கு அன்பராகிவிட்டார் என்கிறார்கள்'' என்றேன் நான்.

''அன்வா! நான் ஒரு கனவு கண்டேனடா!'' என்றான் கோபாலன் மீண்டும்.

எனக்குப் பகீர் என்றது. அவசரம் அவசரமாகக் கூறினேன். ''நீ உன் கனவில் என் துப்பாக்கியை......''

''இல்லை. என் கைத் துப்பாக்கியினால் யாரோ பாபுவைச் சுடுவதைப் போலத்தான் கண்டேன்'' என்று கோபாலன் குறுக்கிட்டான்.

நான் அவனுக்கு என் கனவைச் சொன்னேன்.

''பாபூ நம் இருவரிடமும் கோபித்துக் கொண்டுதான் போய்விட்டார்'' என்றான் கோபாலன்.

பிறகு நாங்கள் இருவரும் சேர்ந்து அழுது விட்டோம். மோகன் கேவிக் கேவி அழலானான். அந்த அழுகையில் அவனுக்குக் குரல் மீண்டும் வந்து விட்டதைக் கண்டு நாங்கள் வியந்து மகிழ்ந்தோம். இனி அவனால் பேச முடியும்!

பிப்ரவரி பதின்மூன்று.

நேற்று எத்தனையோ ஆறுகளிலும், கடல்களிலும் தங்கள் சாம்பல் கரைக்கப்பட்டது. சௌபாட்டியில் நாங்கள் கூட இந்தக் காட்சியை எங்கள் கண்களால் கண்டோம். அப்பப்பா! எத்தனை லட்சம் பேர் ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள்! அவர்களில் பலர் முஸல்மான்கள். நீங்கள் இறந்து பதின்மூன்று நாட்கள் ஆகிவிட்டன. இத்தனை நாட்களுள் நமது சர்க்கார் எத்தனையோ தீயவர்களைச் சிறைப் பிடித்து விட்டது! ஹிந்து முஸ்லிம்களிடையே சண்டையை மூட்டி உங்களைக் கொல்ல முனைந்தார்களே, அவர்களையெல்லாம் கைது செய்து விட்டது! இந்துஸ்தானம் பாகிஸ்தானம் இரண்டிலும் உள்ள மக்கள் இனி அடி தடிக்குப் போக மாட்டோம் என்று மண்டியிட்டு இறைஞ்சுகிறார்கள்! நீங்கள் இவர்களை மன்னித்து விடுங்கள், திரும்ப வந்து விடுங்கள்!

இன்று மாலை எல்லோரும் கடற்கரையை விட்டுப் போன பிறகு நான் பேசாமல் பிறருக்குத் தெரியாமல் என் துப்பாக்கியை ஒடித்து நீரில் விட்டெறிந்து விட்டு வந்து விட்டேன். நான் என் துப்பாக்கியை ஒடித்துப் போட்ட இடத்தில் கோபாலனின் ஒடிந்த கைத்துப்பாக்கியும் வில் — அம்பும் கிடப்பதைக் கண்டேன்.

நான், கோபால், புத்து, ஜைனப், சினு, எல்லாரும் கன்னத்தில் போட்டுக் கொள்ளுகிறோம். இனி நாங்கள் சண்டையிட மாட்டோம். உறுதி கூறுகிறோம். எங்களை மன்னித்து மீண்டும் வந்துவிடுங்கள் பாபூ!

உங்கள் அன்புக்குரிய அன்வர்.

தமிழாக்கம்: ரா. வீ.



திருமதி

சியாமளா ராஜகோபால்

திருச்சிராப்பள்ளி

தோற்றம் : 4-1-1915

மறைவு : 4-8-1968

*

"தெய்வம் தொழாஅள்
கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"



# அத்வைதமும் அணு விஞ்ஞானமும்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

மனித வாழ்வு உள்ள வரையில் ஆசை உண்டு, துன்பம் உண்டு, பயம் உண்டு, துவேஷம் உண்டு. இவற்றிலிருந்து விடுபடுவதே மோக்ஷம். அத்வைத அநுபவத்தால்தான், பாசமும், துன்பமும், பயமும், துவேஷமும் நிவிருத்தியாகி மோக்ஷ ஆனந்தத்தை இங்கேயே அநுபவிக்க முடியும். நமக்கு அந்நியமாக இன்னொரு வஸ்து உள்ளபோதுதான் அதனால் துன்பம், அதனிடம் ஆசை அல்லது பயம், அதன் மீது துவேஷம் இவை உண்டாக முடியும். இன்னொன்றே இல்லை — காண்பன எல்லாம் ஒரே பரமாத்மா — என்ற அத்வைத ஞானம் அநுபவமாக வந்துவிட்டால் அப்புறம் ஆசையும், பயமும், கோபமும், துயரமும் ஏற்பட வழி ஏது? தேளும் பாம்பும் இப்போது நமக்குத் துன்பம் தருகின்றன. நாமே தேளாகவும் பாம்பாகவும் இருந்தால் இந்தத் துன்பம் இராது அல்லவா? எல்லாம் நாமே என்ற உணர்வு வந்துவிட்டால் எப்போதும் ஸ்வபாவமான ஆனந்தம்தான் இருக்கும். அதுதான் மோக்ஷ நிலை. சரீரம் நசித்துச் செத்துப் போனபின் தான் மோக்ஷம் என்று எங்கேயோ ஓரிடத்துக்குப் போக வேண்டும் என்பதில்லை. அனைத்தும் ஒன்றே என்ற அத்வைத ஞானம் சித்தித்தால் இங்கேயே இப்பொழுதே மோக்ஷத்தில் இருக்கிறோம்.

'அனைத்தும் ஒன்று என்பது எப்படிச் சரியாகும்? இத்தனை மாறுபாடுள்ள நானாவித வஸ்துக்களைப் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோமே!' என்று தோன்றலாம். ஒன்று, பிரத்தியட்சமாகக் காண்பது சத்தியமாக இருக்க வேண்டும்; அல்லது வேதாந்தம் சொல்வதும், ஞானிகளின் அநுபவமுமான அத்வைதம் சத்தியமாக இருக்க வேண்டும்.

சத்தியமாக இருப்பது எதுவோ அது மாறாத சாந்தியும் ஆனந்தமும் தர வேண்டும். நம் பிரத்தியட்ச வாழ்க்கையில் இந்தச் சாந்தியும் ஆனந்தமும் இல்லையே! வேதாந்தம் சொல்கிற அத்வைதத்தில்தான் அவை இருக்கின்றன. அதை அநுபவிக்கும் ஞானிகள்தான், மற்ற ஜனங்களுக்கு உள்ள துன்பமும் சஞ்சலமும் இல்லாமல் எப்போதும் சாந்தியாக, எப்போதும் திருப்தியாக, எப்போதும் ஆனந்தமாக இருக்கிறார்கள். இதிலிருந்தே எல்லாம் ஒன்று என்ற அத்வைதமே சத்தியம் என்றாகிறதல்லவா? சொப்பனத்தில் எத்தனையோ வஸ்துக்களைப் பார்க்கிறோமே, நாம் விழித்துக் கொண்டவுடன் அவை எல்லாம் என்ன ஆயின? சொப்பனம் கண்ட ஒருத்தன் மட்டும்தானே எஞ்சி நிற்கிறான்? அப்படியே இந்த லோகமெல்லாமும் ஒரு சொப்பனம் தான். மாயை நீங்கி ஞான நிலையில் விழித்துக் கொண்டால் அப்போது ஒரே பரமாத்மா எஞ்சி நிற்பதை அநுபவிக்க முடியும்.

காண்கிற உலகம் பலவிதமாக இருந்தாலும் ஒன்றேதான் இத்தனையும் ஆகியிருக்கிறது என்பதை நவீன சயன்ஸ் தெளிவாக ஒப்புக் கொண்டு நிலைநாட்டுகிறது. ஐம்பது வருஷங்களுக்குமுன் உலக வஸ்துக்கள் எல்லாம் எழுபத்திரண்டு மூலப் பொருள்களுக்குள் அடங்குவதாக ஸயன்ஸ் சொல்லி வந்தது. இந்த மூலப்பொருள்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவை என்பதே அன்றைய கருத்து. ஆனால் இப்போது இந்த மூலப் பொருள்கள் எல்லாமும்கூட வேறு வேறான பொருட்கள் அல்ல என்றும், ஒரே சக்தி (energy)தான் இவை எல்லாமாகவும் ஆகியுள்ளது என்றும் ஸயன்ஸ் நிபுணர்கள் நிலைநாட்டியிருக்கிறார்கள். பொருள் (matter), சக்தி (energy) இவையும் வேறு வேறானவை அல்ல என்று நவீன ஸயன்ஸ் சொல்லுகிறது. ஆக, அத்வைதம்தான் ஸயன்ஸும் நமக்குக் காட்டுகிற உண்மை. ஐன்ஸ்டைன், ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் போன்ற பிரபல ஸயன்ஸ் நிபுணர்கள் உபநிஷதமும் சங்கர பகவத்பாதாளும் உபதேசித்த அத்வைத சித்தாந்தத்துக்கு மிகவும் நெருங்கி வந்துவிட்டார்கள். உலகம் மாயை என்று அத்வைதம் கூறுவதற்குப் பொருள் யாதெனில், 'உலகம் இறுதி சத்தியமல்ல; இது வியவகாரத்துக்கு மட்டுமே சத்தியம்; இதனுடைய இருப்பும் பிரம்மம் என்ற ஒன்றைச் சார்ந்ததே' என்பதுதான். இதையே மேற்சொன்ன ஸயன்ஸ் நிபுணர்களும் சொல்கிறார்கள். பிரம்மமே பரமார்த்திக சத்தியம், உலகம் வியவகாரிக சத்தியமே என்று அத்வைதம் சொல்வதைத்தான் இவர்கள் "உலக இயக்கமெல்லாம் இன்னொன்றைச் சார்ந்தவை ("relative") தான்; முழு உண்மை ("absolute") அல்ல" என்கிறார்கள். சக்தியும் பொருளும் ஒன்று என்ற மகத்தான உண்மையைக் கண்ட அணு விஞ்ஞானிகள் அந்த அறிவைக் கொண்டே அணுகுண்டைக் கண்டுபிடித்திருக்கிறார்கள் என்பது பரிதாபம். வெளி உலக வஸ்துக்களைக் குறித்து ஸயன்ஸால் நிலைநாட்டப்படும் அத்வைதம் மக்களின் பாவனையிலும் தோயவேண்டும். ஜீவகுலம் எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானமும் ஸயன்ஸ் வழியாக ஏற்பட்டால், அணுகுண்டைத் தயாரித்த நவீன ஸயன்ஸே ஆத்மஹானிக்குப் பதிலாக மகத்தான ஆத்ம க்ஷேமம் செய்ததாகவும் ஏற்படும்.

பல் வைத்தியர்கள் கூறுவது :

# தவறாது பிரஷ் கொண்டு பல் துலக்கி ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால் ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்

போர்ஹென்ஸ் பற்பசையைத் தவறாது பயன்படுத்துவோர், தாங்களாகவே என்ன கூறுகிறார்கள், பாருங்கள்.

"போர்ஹென்ஸ் பற்பசைக்கும், அதைத் தவறாமல் உபயோகிக்கச் சொன்ன டாக்டருக்கும் நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன்."

(கையொப்பம்) விபூதி பூஷண் போஸ், கல்கத்தா.

"உலகப் புகழ் பெற்ற உங்கள் பற்பசையை சிறு பிராயம் முதல் தவறாது உபயோகித்து வருகிறேன்... இன்று வரை என்னுடைய ஒவ்வொரு பல்லும் வலுவாக இருக்கிறது... நான் போர்ஹென்ஸை எல்லாவற்றிலும் சிறந்ததாகக் கருதுகிறேன். ஏனெனில் அது பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை. இது ஒன்றே போதுமே."

(கையொப்பம்) எஸ். என். சட்டர்ஜி, கோயம்புத்தூர்.

(இந்த நற்சாட்சிக் கடிதங்களின் புகைப்படப் பிரதிகளை ஜெப்ரி மானெர்ஸ் & கோ. லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.)

பற்களைத் தக்க முறையில் பராமரிக்க, இரவிலும் காலையிலும், போர்ஹென்ஸ் பற்பசையையும், போர்ஹென்ஸ் டபிள்-ஆக்க்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்... கூடவே, உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!






இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.

இப்புத்தகத்தைப்* பெற இந்தக் கூப்பனுடன் 25 பைசா தபால் தலையை (தபால் செலவுக்காக) "மானெர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1" என்னும் முகவரிக்கு அனுப்புக. K 6

பெயர் ________ வயது ________

முகவரி ________

________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன்கீழ் கோடிடவும்: ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

105F-182 Tml




## 21. ரஜனிப்பூர் பைத்தியக்காரி

**போ**லீஸார் வந்த பிறகு சற்று நேரம் வாசலிலேயே பேசிக் கொண்டிருந்தார்கள். சில நிமிஷங்களுக்கெல்லாம் ராகவனும் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரும் உள்ளே வந்தார்கள்.

ராகவன் தாரிணியைச் சுட்டிக் காட்டி, ''இந்தப் பெண்மணிதான்!'' என்று சொன்னான்.

''முகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. ரொம்பவும் பயந்து போயிருக்கிறாள். பயப்படக் காரணம் இல்லையென்று நான் சொல்லவில்லை. இருந்தாலும்... கையிலே இரத்தக் கறையைக் கூட இன்னும் கழுவவில்லை போலிருக்கிறதே!'' என்று போலீஸ் அதிகாரி கூறினார்.

''கழுவலாமோ, கூடாதோ என்று சந்தேகமாயிருந்தது. நீங்கள் வருவதற்குத்தான் காத்திருந்தேன்'' என்றாள். தாரிணி.

''குரல் எப்படி நடுங்குகிறது பார்த்தீர்களா? இந்தப் பெண்மணியை உத்தேசித்துத்தான் போலீஸ் ஸ்டேஷனுக்கு நேரே கார் ஓட்டிக் கொண்டு வரவில்லை. எப்படியாவது இவருடைய பெயரைச் சம்பந்தப்படுத்தாமல் இருந்தால் நல்லது.''

''என்னால் முடிந்தவரையில் பார்க்கிறேன். இவருடைய விலாசம் தெரியுமல்லவா? ஒரு வேளை இவருடைய சாட்சியம் அவசியம் தேவையாயிருந்தால்?''

''தேவையாயிருந்தால், எப்போது சொன்னாலும் நானே அழைத்துக் கொண்டு வருகிறேன். ஆனால் அதற்குத் தேவையில்லாமல் பார்த்துக்கொண்டால் நல்லது.''

''பார்க்கலாம்! — நீ ஒன்றும் பயப்படாதே அம்மா! போய்க் கைகளைச் சுத்தமாய் அலம்பிக்கொள். இந்த மாதிரிக் காரியங்களில் ஸ்திரீகள் தலையிடவே கூடாது. இது உனக்கு ஒரு பாடமாயிருக்கட்டும். இந்தச் சம்பவத்தைப் பற்றி யாரிடமும் பேசாதே! உனக்குத் தெரியும் என்பதாகவே காட்டிக்கொள்ளாதே.''

இவ்விதம் தாரிணியைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் போலீஸ் அதிகாரி ராகவனைப் பார்த்து, ''நாம் போகலாம், வாருங்கள்! இப்போதே ஒரு வேளை 'டூலேட்' ஆகிப் போயிருக்கலாம்!'' என்று சொன்னார்.

''சீதா! நான் போய் வருகிறேன். தாரிணி இன்றைக்கு இங்கேயே இருக்கட்டும்!'' என்றான் ராகவன்.

போலீஸ் உத்தியோகஸ்தர் தாரிணியிடம் பேசியது சீதாவுக்கு அரை குறையாகத்தான் புரிந்தது. தாரிணியை மட்டும் காப்பாற்றிவிட்டுத் தன்னுடைய கணவன் ஏதோ ஆபத்துக்கு உட்படப் போவதாக அவளுக்குத் தோன்றியது.

''எங்கே போகிறீர்கள்? நானும் உங்களுடன் வருகிறேன்!'' என்று நடுங்கிய குரலில் கூறினாள்.

போலீஸ் உத்தியோகஸ்தர் இதற்குள் அவளுடைய பயத்துக்குக் காரணத்தைத் தெரிந்து கொண்டார்.

''இவர்தான் உங்கள் மனைவியா?... பயப்பட வேண்டாம், அம்மா! உன் புருஷனைக் கைது செய்து கொண்டு போகவில்லை. போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து ஒரு வாக்குமூலம் எழுதி வைக்க வேண்டும். அவ்வளவுதான். அரை மணி நேரத்தில் திரும்பி வந்து விடுவார்!'' என்றார்.

அது உண்மைதானா என்று அறிந்து கொள்ள வேண்டிச் சீதா ராகவனுடைய முகத்தைப் பார்த்தாள். அவன் சிறிது முக மலர்ச்சியுடனேயே, ''ஆமாம், சீதா! எனக்கு ஆபத்து ஒன்றும் இல்லை. நானும் சூரியாவும் அரை மணியில் திரும்பி வந்து விடுவோம். தாரிணி! சீதாவிடம் எல்லாம் சொல்லி விடு! அவள் வீண் பீதி அடைந்திருக்கிறாள்!'' என்று சொல்லிப் போலீஸ் அதிகாரியைத் தொடர்ந்தான்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் வாசலிலிருந்து மோட்டாரும், மோட்டார் சைக்கிளும் புறப்பட்டுச் சென்றன. சீதா வாசற் கதவைத் தாளிட்டுக் கொண்டு வந்தாள்.

''இனிமேல் நான் இந்தக் காரில் ஏறவே மாட்டேன். என் குழந்தையையும் ஏற விட மாட்டேன். காரை உடனே விற்றுவிட்டு வேறு வாங்கவேண்டியதுதான்'' என்றாள்.

''ஆமாம்; இந்தக் காரில் என்னை ஏறச் சொன்னால்கூட இனிமேல் ஏற மாட்டேன். நீ இவ்வளவு தைரியமாயிருப்பதே எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது!'' என்றாள் தாரிணி.

''என் மாமியார் இந்தச் சமயத்தில் இங்கே இருந்திருந்தால் ஒரே ரகளையாகப் போயிருக்கும். அவருக்கு ஒரு வேளை வைத்தியம் செய்யும்படி ஆகியிருக்கும். நல்ல வேளையாகக் குழந்தை வஸந்தியும் தூங்கிப் போய்விட்டாள்.''

''சீதா! உன் குழந்தையைப் பார்க்க எனக்கு ஆவலாயிருக்கிறது. முதலில் கைகளைக் கழுவிக் கொள்கிறேன். கை அலம்புவது மட்டுமென்ன? ஸ்நானமே செய்தாலும் நல்லதுதான்! குழாய்த் தண்ணீரில் ஸ்நானம் செய்தால்மட்டும் போதாது. கங்கைக்குப் போய் ஸ்நானம் செய்ய வேண்டும்!'' என்று சொன்னாள்.



''இப்போதைக்குக் குழாயில் ஸ்நானம் செய்து வையுங்கள். கங்கா ஸ்நானம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்!'' என்று சீதா சொல்லி, வீட்டின் முன்புறத்தில் இருந்த ஸ்நான அறைக்கு அழைத்துச் சென்றாள். வீட்டின் பின்பக்கம் போவதற்கே அவளுக்குத் தைரியம் வரவில்லை.

ராகவனும் சூரியாவும் திரும்பி வந்தபோது சீதாவும் தாரிணியும் சமையலறையில் ரொட்டி தயாரித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தார்கள். அவர்களுக்கு இந்தக் காட்சி மிகவும் சந்தோஷம் அளித்தது. ''பசியே இல்லை'' என்று அவர்கள் சத்தியம் செய்துவிட்டு, ''நீங்கள் இவ்வளவு கஷ்டப்பட்டு

ரொட்டி தயாரித்திருப்பதால் கொஞ்சம் சாப்பிடுகிறோம்'' என்றார்கள். தாரிணி குளித்திருப்பதைப் பார்த்துவிட்டு அவர்களும் குளித்து வரச் சென்றார்கள்.

சூரியா கொல்லைப்பக்கத்து ஸ்நான அறைக்குப் போய் ஸ்நானம் செய்துவிட்டு வந்தான்.

''இல்லையே! நான் போடவில்லையே!'' என்று சொல்



''அத்தங்கா! ஸ்நான அறைக்கு எதிரே ஓர் அறை பூட்டிக் கிடக்கிறதே. அதில் என்ன இருக்கிறது? ஏதோ சத்தம் கேட்டது?'' என்றான்.

சீதா முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு ''பெருச்சாளி ஓடியிருக்கும்!'' என்றாள்.

''இல்லை; உள்ளேயிருந்து யாரோ கதவைத் தட்டுவது போலிருந்தது'' என்றான் சூரியா.

''ஒருவேளை பூனை பிராண்டியிருக்கும்'' என்றாள் சீதா.

''தாரிணி! ஸ்நான அறையில் உங்களுடைய கைக்குட்டையைப் போட்டுவிட்டு வந்தீர்கள் போலிருக்கிறது. ஒரே இரத்தக் கறையாயிருந்தது. அதை நான் நன்றாக அலம்பி உலர்த்தினேன்!'' என்று சொன்னான் சூரியா.

வித் தாரிணி சீதாவின் முகத்தைப் பார்த்தாள். சீதாவும் தாரிணியின் முகத்தைப் பார்த்தாள்.

''ஞாபக மறதியாகச் சொல்கிறீர்களா?'' என்றான் சூரியா.

சீதா பேச்சை மாற்ற விரும்பி, ''இந்தக் காரை விற்றுவிட வேண்டும்; தெரியுமா? இனிமேல் நான் இந்தக் காரில் ஏறமாட்டேன்'' என்றாள்.

''நான் அப்போதே தீர்மானித்துவிட்டேன். நாளைக்கு முதல் காரியம் காரை விற்கப் போகிறேன். இரண்டாவது, ரிவால்வர் லைசென்ஸ் வாங்கப் போகிறேன். காலம் எப்படிக் கெட்

## உலகப் போட்டியில் ஃபிஷர்

இன்று உலக சதுரங்க வீரராக விளங்கும் போரிஸ் ஸ்பாஸ்க்கி என்னும் ரஷ்யருடன் மோதிக்கொண்டிருப்பவர் அமெரிக்கரான ராபர்ட் ஜே. பாபி ஃபிஷர். இந்த அமெரிக்கர் தமது 12 வயதிலேயே சதுரங்கத்தில் ஒரு பிறவிப் புலி எனக் கருதப்பட்டார். 13 வயதில் அமெரிக்க இளைஞர் வீரர். 14 வயதில் அமெரிக்க நாட்டு வீரர். 15 வயதில் உலகப் பெரும் புள்ளி; இந்த வயதில் யாரும் இந்தச் சிறப்புப் பெற்றதே இல்லை. 20 வயதுக்குள் அவர் உலக மகா வீரராகிவிடுவார் என எல்லோரும் எதிர்பார்த்தார்கள்.



ஆனால் ஆட்டத்தில் புலியாயிருந்தும், குணத்தில் அவர் சிறு பிள்ளையாகவே இருக்கிறார். தோற்றால் பேசவே மாட்டார்; வென்றால் அடாவடித்தனம் செய்வார். தனிப்படத் தம்மை நடத்த வேண்டும் என்பார். இல்லாவிட்டால் போட்டி அதிகாரிகளிடம் கூச்சல் போடுவார்.

எனவே இரண்டாண்டு காலம் ஒதுங்கியிருந்து விட்டார். மீண்டும் அவர் உலக வீரர் பட்டம் பெறும் குறிக்கோளுடன் சதுரங்க ஆட்டத்தில் கலந்துகொண்டிருக்கிறார். □

---

டுப்போய்விட்டது! சாலையோடு போகிறவனைக் குத்திக் கொல்வது என்றால்?... அதுவும் இந்தப் புதுடில்லியில்?'' என்றான் ராகவன்.

பிறகு எல்லாரும் வட்டமாக மேஜையைச் சுற்றிச் சாப்பிடுவதற்கு உட்கார்ந்தார்கள்.

''சீதா! உன் அம்மாஞ்சி இருக்கிறானே? அவன் மகா தைரியசாலி. காரிலே இருந்தபோது அவனுக்குக் கை கால் நடுங்கிக் கொண்டிருந்தது. கீழே இறங்கியதும் பேச்சுப் பிரமாதம்!'' என்றான் ராகவன்.

''நான் பயப்பட்டேன் என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் உங்களைப் போல் தெருவில் ஒருவன் மரண காயம் பட்டுக் கிடக்கும்போது 'நமக்கென்ன?' என்று போக மாட்டேன்!'' என்றான் சூரியா.

''போதும், போதும் இந்தப் பேச்சு! வேறு ஏதாவது பேசுங்கள்!'' என்றாள் சீதா.

''வேறு என்ன பேசுவது? நீதான் பேசேன்!'' என்றான் ராகவன்.

''இவர்கள் இரண்டு பேரும் இத்தனை நாட்களாக ஏன் நம்முடைய வீட்டை எட்டிக்கூடப் பார்க்கவில்லை என்று கேளுங்கள்.''

''எனக்கு ரொம்ப வேலை இருந்தது அத்தங்கா! மன்னித்துக் கொள்! இனிமேல் அடிக்கடி வந்து கொண்டிருக்கிறேன். மாப்பிள்ளைக்கு ஆட்சேபம் இல்லாவிட்டால்....!''

''நீ வருவதில் எனக்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும் சூரியா? நொண்டிச் சாக்குச் சொல்கிறாயா?''

''அப்படிக் கேளுங்கள், நன்றாய்! சூரியா நீ வருவதில் மாப்பிள்ளைக்கு எதற்காக ஆட்சேபம்? வேலையாம் வேலை! இந்த அக்காவைப் பார்க்கப் போக மட்டும் வேலை ஒழிந்ததோ?''

''அத்தங்கா! இவரும் நானும் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள். ஆகையால் வேலை நிமித்தமாகவே நாங்கள் அடிக்கடி சந்திக்க வேண்டியிருக்கிறது.''

''அது என்ன கட்சியோ காட்சியோ எனக்குத் தெரியாது. நீங்கள் இரண்டு பேரும் இனிமேலாவது இங்கே அடிக்கடி வந்து கொண்டிருந்தால் எனக்குத் திருப்தியாக இருக்கும்.''

''நான் வந்திருப்பேன், சீதா! உண்மைக் காரணத்தை இப்போது சொல்லிவிடுகிறேன். உன் மாமியாருக்குப் பயந்து கொண்டுதான் வரவில்லை'' என்று தாரிணி கூறினாள்.

''என் மாமியாரைக் கண்டு எதற்காக நீங்கள் பயப்பட வேண்டும்? நானே பயப்படுவதில்லையே? அவரைப் பற்றிச் சூரியா ஏதாவது இல்லாததும் பொல்லாததும் சொல்லியிருக்கிறான் போலிருக்கிறது. என் மாமியாரைப் போன்ற நல்ல மாமியாரை இந்தப் பூவுலகத்திலேயே காண முடியாது. பெற்ற பெண்ணுக்கு மேலாக என்னிடம் பிரியமாயிருக்கிறார்!''

அந்தச் சமயம் சீதாவிடம் ராகவனுடைய அன்பு பூரணமடைந்தது. அன்பு மட்டுமா? நன்றியும் கூடத்தான். 'இப்போது என்ன சொல்கிறாய்?' என்ற பாவனையாகத் தாரிணியை ராகவன் பார்த்தான். தாரிணியும் ராகவனைப்

# உங்கள் கணவர் வேண்டும் பண்டமெல்லாம் உண்டு மகிழட்டுமே!

## ஸான்ஸைம் மல்ட்டி-யென்ஸைம் காம்பௌண்ட்

## எல்லா வகை உணவுப் பண்டங்களையும் விரைவில் ஜீரணிக்கச் செய்கிறது.

மைக்ரோன் செய்யப்பட்ட 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' ஒரே ஒரு பொட்டலம் பவுடர் அல்லது 3 மாத்திரைகள் அஜீரணத் தொல்லைகளிலிருந்து பூரண விடுதலை அளிக்கிறது. உலகெங்கும் பாராட்டு பெற்ற ஜீரணத் தூண்டுகோலான மல்ட்டி-யென்ஸைம் 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' இன்சுவையும் நன்மணமும் கொண்டது.

'ஸான்ஸைம் காம்பௌண்ட்' 4 சிறந்த வழிகளில் செயல்புரிகிறது.

- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' எல்லாவித உணவுப் பொருட்களையும் ஜீரணித்து, சத்துக்களை உட்கிரகிப்பதோடு பசியையும் தூண்டுகிறது.
- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்டில்' உள்ள 'ஸிமிகோன்' எனும் விசேஷ நுரை எதிர்ப்பு பொருள் வாயுவை விரைவில் கரைத்து, வலியைப் போக்குகிறது.
- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' நொடிப் பொழுதில் அமிலங்களைச் சமனப்படுத்துகிறது.
- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' இன்சுவையும் நன்மணமும் கொண்டு இருப்பதால் சாப்பிட அருவருப்பு தோன்றுவதில்லை. மேலும் மலச் சிக்கல் ஏற்படாமல் தடுக்கிறது.

**ஜீரண பலமே பூரண நலமாகும்.**

உடனடி நிவாரணத்துக்கு மைக்ரோன் செய்யப்பட்ட பவுடர் உட்கொள்ளவும். மாத்திரையாகவும் ஸான்ஸைம் கிடைக்கிறது.

சாப்பிடும் அளவு: உணவுக்குப்பின் தண்ணீருடன் அல்லது தாம்பூலத்துடன் சாப்பிடவும் ஒரு பொட்டலம் அல்லது 2 முதல் 4 மாத்திரைகள்.

இலவச விஞ்ஞான வெளியீட்டுக்கு எழுதவும்.

'ஸான்ஸைம் காம்பௌண்ட்' எல்லா பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கிறது.








**யூனி ஸாங்க்யோ லிட்.**
22, டா. தேசாய் ரோடு, பம்பாய்-26.

PRATIBHA 1711-29 Tam R

*தமிழ்நாட்டிற்கு விநியோகஸ்தர்கள்:*

M/s கணபதி & கோ, 108/104, லிங்கி செட்டித் தெரு, த.பெ. நெ. 1986, சென்னை-1

# ராக்:.போர்ட் பொருளாதார அமைப்பை வலுப்படுத்துகிறது



நமது கிராமங்களில் பொருளாதாரப் புரட்சி நிகழ்ந்துவருகிறது. நீர்ப்பாசன அமைப்புக்களின் பயனாக மேலும் செழுமையான பயிர்கள் நாட்டுப்புறங்கள் முழுவதிலும் புதுச் செல்வத்தைப் பரப்பிவருகின்றன. மண் குடிசைகள் இருந்த இடங்களில் செங்கல் கட்டடங்கள் தோன்றிவருகின்றன. நமது விவசாயச் செல்வத்தைப் பத்திரமாகப் போற்றிக்காக்க அங்கங்கே கிடங்குகள் தோன்றிவருகின்றன.

இந்த முன்னேற்றப் பாதையின் ஒவ்வொரு அடியிலும், பொருளாதாரத்திற்குத் திண்மையையும், வலுவையும் தந்து, புரட்சிக்குப் புத்தூக்கம் அளிக்கிறது ராக்:.போர்ட்.





## ராக்:.போர்ட்

டால்மியா சிமெண்ட்







**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.,**
பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் ஆலைகள்:
டால்மியாபுரம், தமிழ் நாடு.
தலைமை அலுவலகம்: சிந்தியா ஹவுஸ், புது டெல்லி-1.
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
**சிமெண்ட் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் லிட்.,**
டால்மியாபுரம், தமிழ் நாடு.

பார்த்தாள். அவர்கள் கண்களின் மூலமாகப் பேசிக் கொண்டதைச் சீதா கவனிக்கவில்லை. கவனித்திருந்தாலும் அந்த நயன பாஷையின் பொருள் அவளுக்கு விளங்கியிராது.

சாப்பிட்டு முடிந்து எல்லோரும் முன் அறைக்கு வந்ததற்கும் டெலிபோன் மணி அடித்ததற்கும் சரியாக இருந்தது. ராகவன் ரிஸீவரை எடுத்துக் கொண்டு பேசினான்.

''ஓகோ? உயிர் போய் விட்டதா? அடடா... 'கத்திக் காயத்தினால் மரணம்' என்று டாக்டர் சர்டிபிகேட் கொடுத்திருக்கிறாரா? ரொம்பச் சரி. யார்? விநாயகராவ் மதோங்கரா?... உலகத்துக்கு ஒரு நஷ்டமும் இல்லை!... ஆனாலும் கொலை கொலைதானே? யாராயிருக்கும்? ஏதாவது ஊகம்...ரஜனிப்பூர் பைத்தியக்காரியா? கேள்விப்பட்டதில்லையே?... சரி சரி! நான் பார்த்துக் கொள்கிறேன். ரொம்ப வந்தனம்!''

டெலிஃபோன் ரிஸீவரை ராகவன் வைத்ததும் ஏக காலத்தில் மூன்று பேரும், ''என்ன? என்ன?'' என்று பரபரப்புடன் கேட்டார்கள்.

''அந்த விஷயமாகத்தான் பேசவே கூடாது என்கிறாயே?''

''பரவாயில்லை; சொல்லுங்கள். சாப்பிடும்போது அந்தப் பேச்சு வேண்டாம் என்று சொன்னேன்'' என்றாள் சீதா.

''அப்படியானால் கேட்டுக் கொள். ஆஸ்பத்திரியில் நாங்கள் கொண்டு போய் விட்ட அரை மணிக்குள் உயிர் போய் விட்டதாம். கத்திக் குத்தினால் சாவு என்று டாக்டர் சர்டிபிகேட் கொடுத்திருக்கிறாராம். கொலையுண்டு

---

## விம்பிள்டன் வீரர்

லாஸ் ஏஞ்சல்ஸ் டென்னிஸ் மைதானம். டென்னிஸ் ஆட்டத்தில் ஈடுபாடு மிக்க ஸ்டான்லி ஸ்மித் பந்து பொறுக்கிப் போடும் பையனாக அந்தக் கிளப்பில் சேர்ந்து தன் ஆட்டத்தை விருத்தி செய்துகொள்ள விரும்பினான். ஆனால் ஸ்டான்லி ஸ்மித்தை அந்தக் கிளப்பில் ஆடும் பையன்கள் பந்து பொறுக்கிப் போடும் பையனாக ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை. அவனை ஒதுக்கித் தள்ளினார்கள். ஆட்டக்காரப் பையன்களின் விளையாட்டில் அவன் குறுக்கிட்டு விடுவானோ என்ற பயம். இதனால் ஸ்டான்லி ஸ்மித்தின் டென்னிஸ் மோகம் குன்றிவிடவில்லை. அமெரிக்காவின் தலைசிறந்த டென்னிஸ் சாம்பியன்களில் ஒருவரானார். விம்பிள்டனில் வெற்றி பெற்று உலக சாம்பியனாகவும் இன்று விளங்குகிறார்.

தனியர் ஆட்டத்தில் ஸ்டான்லி ஸ்மித் புகழேணியில் மேலும் மேலும் ஏறிப் பிரகாசிக்க முழு மைதானத்திலும் வாயு வேக மனோ வேகத்தில் ஓடியாடிச் சுற்றி வரும் பழக்கத்தை மேற்கொண்டார். தாம் முழு மைதானமும் ஓடி ஆடுவதற்குப் பயிற்சி பெற்றதை ஸ்டான்லி ஸ்மித்தே விவரிக்கிறார்:

''நான் உயர்தரப் பள்ளியில் பயின்ற நாட்களில் உயரம் தாண்டலில் (High Jump) கெட்டிக்காரன். அது தவிர தினம் உடல் பயிற்சியில் ஈடுபடுவேன். ஓட்டப் பந்தயமும் மேற்கொள்வேன்.''

ஸ்டான்லி ஆர். ஸ்மித்துக்கு அமெரிக்க ராணுவத்தில் 14,910 டாலர் சம்பளமாகக் கிட்டுகிறது. அமெரிக்க ராணுவத்தில் இருபத்திநான்கு வயதான ஸ்டான்லி ஸ்மித்துக்குள்ள ஒப்பந்தம் விசித்திரமானது. அவர் உலகில் எந்தப் பாகம் சென்றும் டென்னிஸ் விளையாடலாம்; ஆனால் அவருக்குக் கிடைக்கும் பரிசு நிதியை ராணுவத்துக்குத் தந்துவிட வேண்டும்! அதைப் பற்றி ஸ்டான்லி ஸ்மித்தே குறிப்பிடுவதாவது: ''அவர்கள் நூறு டாலர் சம்பளம் கொடுத்துவிட்டு என்னிடமிருந்து 99 டாலரைப் பெற்றுக் கொண்டுவிடுவார்கள்!''

விம்பிள்டன் மைதானம். கென்ட் கோமகன் விம்பிள்டன் தங்கக் கோப்பையை ஸ்டான்லி ஸ்மித்துக்கு வழங்கினார். 13,000 டாலர்களுக்கான செக்கும் வழங்கப்பட்டது அவருக்கு. பிறகு ஸ்டான்லி ஸ்மித் வியர்வை கொட்டப் பேட்டி அறைக்கு வந்தார். அங்கே பத்திரிகைப் பிரதிநிதிகள் அவருடன் காத்திருந்தனர்.

ஸ்டான்லி ஸ்மித் கூறினார்: ''ஆட்டத்தின் முடிவைப் பற்றி என்றுமே எனக்குத் துளிக்கூடச் சந்தேகம் இருந்ததில்லை!''



ஒரே ஒரு தடவை ஸ்டான்லி ஸ்மித் தமக்குக் கிடைத்த பரிசுப் பணத்தை ராணுவத்துக்கு இழக்க வேண்டியிருக்கவில்லை. சாலிஸ்பரியில் நடைபெற்ற பந்தயத்தில் நாஸ்டேஸைத் தோல்வியடையச் செய்தபோது ஸ்டான்லி ஸ்மித் ராணுவத்திலிருந்து லீவு பெற்று இருந்ததால் பரிசுப் பணம் பறிபோகவில்லை!

- குன்றுமணி



## சுதந்திரத் திருநாள்

ஏழைமையை அகற்றி, வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்து, நாம் நமக்குள்ளேயே வலுவானவர்களானால்தான் நாம் உலகத்தின் மதிப்பைப் பெற முடியும். எல்லாவற்றுக்கும் மேலாக நமக்கு நாட்டின் ஒருமைப்பாடே தேவை. இன, மொழி, மாநிலப் பற்று நமது நாட்டைப் பலவீனப் படுத்திவிடும்.

எதிர்க் கட்சிகள் அரசை விமரிசிக்கக் கூடாது என்று நான் சொல்லவில்லை. அவர்கள் தாராளமாக உரிமை பெற்றிருக்கிறார்கள். ஆனால் அது ஜனநாயகப் பண்பாட்டுடன் நடைபெற வேண்டும். அத்தகைய விமரிசனங்களை நாம் வரவேற்க வேண்டும்.

உலகாயதச் செல்வங்களினால் ஒரு நாட்டின் பெருமை வலியுறுவதில்லை. அறவலியினாலேயே பெருமையுறுகிறது. நாட்டின் நல்லிதயம் படைத்த இளைஞர்களை ஒழுக்கம், கட்டுப்பாடு, ஒற்றுமை, கடமை ஆகியவற்றைக் கடைப்பிடித்து நாட்டின் வலிமையைக் காக்கக் கோருகிறேன்.

15-8-64 - லால்பகாதூர் சாஸ்திரி

---

செத்துப் போனவனின் பெயர் விநாயக ராவ் மதோங்கர். ரஜனிப்பூரில், பழைய ரஜனிப்பூர் மகாராஜாவின் துர்மந்திரி என்று சொன்னேனே, அவன்தான் கொஞ்ச நாட்களாக இந்த ஊரில் இருந்தானாம். கிளப்பில் ரொம்பப் பேருக்கு அவனைத் தெரியுமாம். குடித்து விட்டு ரகளை செய்வானாம். ரஜனிப்பூர் பைத்தியக்காரி என்று பெயர் பெற்ற ஒரு ஸ்திரீ அவனைச் சில நாட்களாக அடிக்கடி தொடர்ந்து போய்க் கொண்டிருந்தாளாம். போலீஸில் கூட மதோங்கர் புகார் செய்திருந்தானாம். ஏற்கனவே ரஜனிப்பூர் மகாராஜாவைக் கொல்ல முயன்றவளாம். இவனைக் கொன்றவளும் அவளாய்த்தான் இருக்கும் என்று ஊகிக்கப்படுகிறதாம். போதுமா? எத்தனையோ துப்பறியும் கதைகள் படித்திருக்கிறோம். அவற்றையெல்லாம் இந்த உண்மைச் சம்பவம் தோற்கடித்து விடுகிறதா இல்லையா? ஏன் எல்லோரும் இப்படி மௌனம் சாதிக்கிறீர்கள்? சீதா, உனக்குத் துப்பறியும் கதைகள் ரொம்பப் பிடிக்குமே?"

'ரஜனிப்பூர் பைத்தியக்காரி' என்றதும் சீதாவும் தாரிணியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். இரண்டு பேருடைய பார்வையும் பயங்கரத்தையும் பரிதாபத்தையும் வெளியிட்டன.

சீதாவைக் கூப்பிட்டு ராகவன் குறிப்பாகக் கேட்டதும், "இந்த மாதிரி விஷயமெல்லாம் கதையோடு இருந்தால் நன்றாயிருக்கும்! உண்மையில் நடக்கக் கூடாது!" என்றான்.

"எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா? ரஜனிப்பூர் பைத்தியக்காரியைப் போல் இன்னும் பலர் தோன்ற வேண்டும். அப்போதுதான் நம் நாட்டுச் சுதேச ராஜாக்களுக்கும் அவர்களுடைய துர் மந்திரிகளுக்கும் புத்தி வரும்!" என்றான் சூரியா.

"சுதேச ராஜாக்களிடம் உனக்கு என்னடா, அப்பா, அவ்வளவு கோபம்?" என்றான் ராகவன்.

அவர்களுக்குள் விவாதம் நடந்தபோது சீதாவின் மனமெல்லாம் கொல்லைப்புறத்துப் பூட்டிய அறையிலேயே இருந்தது. 'ரஜனிப்பூர் பைத்தியக்காரி' என்பவள் அந்த வீட்டிலேயே அப்போது இருக்கிறாள்! தான் அதை அங்குள்ளவர்கள் யாரிடமாவது சொல்ல வேண்டுமோ? சொன்னால் என்ன விபரீதம் வருமோ? சொல்லாவிட்டால் என்ன விபரீதம் நேருமோ? தாரிணியின் சொந்தத் தாயாரோ அல்லது வளர்ப்புத் தாயாரோ அவள்! தன் தாயார் கொலைகாரி என்பது தாரிணிக்குத் தெரிந்தால் எப்படி இருக்கும்? ஒருவேளை தெரிந்தேயிருக்குமோ? அவளைப் பார்த்துத் தன் பெற்றோர்கள் யார் என்பதைத் தாரிணி தெரிந்து கொள்ள விரும்பினாள் அல்லவா? அதற்கு இனிமேல் சந்தர்ப்பம் கிடைக்குமா? — தாரிணியின் தாயார் உண்மையில் அந்தப் பைத்தியக்காரிதான்! இப்படிப்பட்ட காரியம் செய்ய உத்தேசித்திருந்தபடியினால் தாரிணியின் மனம் நோகாமலிருக்கும் பொருட்டு வளர்ப்புத் தாயார் என்று பொய் சொல்லியிருப்பாள்...

சட்டென்று இன்னொரு விஷயம் சீதாவுக்கு ஞாபகம் வந்தது. அந்தப் பைத்தியக்காரி தன்னிடமும் தன் தாயாரிடமும் எதற்காக அவ்வளவு அபிமானம் காட்டினாள்? எதற்காகத் தனக்கு ரத்தின ஹாரமும் பணமும் கொடுத்தாள்? இதன் காரணத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் ஆசை சீதாவின் மனத்தில் மற்ற எல்லா எண்ணங்களையும் அடக்கிக் கொண்டு மேலெழுந்தது. அதோடு அந்தக் கொலைகாரி அளித்த ரத்தின மாலையை இனிமேல் தான் அணிந்து கொள்ளக் கூடாது என்ற எண்ணமும் உதித்தது. **(தொடரும்)**

நான் விரும்பி உபயோகிப்பது
நம்பகமான

# ஐடெக்ஸ்

## அழகு சாதனங்கள்

*ஜெய கௌசல்யா*






MFRS: ARAVIND LABORATORIES,
MADRAS-33

# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்

ஆரோக்கியமும்
மகிழ்ச்சியுமூட்டுவது

அஜீரணம், வாயு, தூக்க மின்மை, வாந்தி, வயிற்றுப் போக்கு போன்ற குழந்தையின் உடல் கோளாறுகளை விரைவில் குணப்படுத்துகிறது.
பசியைத் தூண்டி,
ஜீரணசக்தியைச் சீராக்கி, குழந்தையை ஆரோக்கியத்துடன் கொழுகொழுவென்று வளரச் செய்கிறது.



அமிர்தாஞ்சன்
லிமிடெட்




FDSAG-1660 TM

அது ஒரு பெரிய குடும்பம்; பழங்காலத்துக் குடும்பம்; ஒரு தாய் வயிற்றில் பிறந்து வளர்ந்து, பிறகு அந்த ஊரையே நிறைத்துக் கொண்டு பெற்றுப் பெருகி வாழ்ந்த குடும்பம்.

அந்த ஊரும் வளமான ஊர். ஊரைச் சுற்றி ஆறொன்று சலசலத்து ஓடியது. மண்ணும் பொன் விளையும் மண். சூரிய வெளிச்சத்துக்கோ, சுகமான காற்றுக்கோ, பருவ மழைக்கோ அங்கு பஞ்சமே இல்லை.

உழுதுண்டு வாழ்வதற்கு அங்கு ஏராளமான நிலப் பரப்பு. கைத்தொழில் செய்து ஒருவருக்கொருவர் உதவியாக வளர்வதற்கு அங்கு எத்தனையோ வாய்ப்புகள். ஆடுவோர் பாடுவோர், கவி கட்டுவோர், சித்திரம் தீட்டுவோர், சிற்பம் செதுக்குவோர் முதலிய கலைஞர்களும் அங்கு பெருகியிருந்தனர்.

இந்த மண்ணுலகத்திலே உள்ள முக்கியமான இன்பங்களையெல்லாம் அனுபவிக்கும் வசதியைப் பெற்றிருந்தது அந்தக் குடும்பம். இயற்கை அந்தக் குடும்பத்தைத் தன் செல்லப் பிள்ளையாகப் பாவித்தது. அண்டை அயல் ஊர்களில் இருந்தவர்களும் அந்தக் குடும்பத்தினருக்குத் தொல்லை கொடுக்க அஞ்சி நடுங்கினர்.

காலம் சென்றது.

குடும்பம் குடும்பமாகப் பிரிந்து தனி வீடு கட்டிக் கொண்டு வாழ்ந்தவர்களிடையே பூசல் முளைத்தது. வீடுகளுக்கு வேலிகள்

# கூட்டுக் குடும்பம்?

## அகிலன்

கட்டிக் கொண்டார்கள். வயல்களுக்கு வரப்புகளைக் கட்டிக் கொண்டார்கள். பங்காளிக் காய்ச்சல், கொண்டவன், கொடுத்தவன் சண்டை, அப்பன் பிள்ளை தகராறு - இப்படிப் புகையத் தொடங்கியது.

இவன் வீட்டு நிலத்தில் அவன் வீட்டு மாடுகள் மேய்ந்தன என்று குற்றம் சாட்டி, ஒருவன் அவன் வீட்டு மாடுகளையெல்லாம் தன் வீட்டுப் பட்டிக்கு விரட்டிக் கொண்டு போவான். மறு நாள் அவனும் அதே மாடுபிடித்துக் கட்டும் காரியத்தை விருப்போடு செய்வான். இவன் கட்சிக்கு நாலு பேர்; அவன் கட்சிக்கு நாலு பேர். இவன் வீட்டு மாம்பழத்தை அவன் வீட்டு அணில் கடித்துவிட்டது என்பான். அவன் வீட்டு நாய் இவன் வீட்டுக்கு வந்து குட்டி போட்டு விட்டதென்பான். அவ்வளவுதான்!

மானம் என்பார்கள்; ரோஷம் என்பார்கள்; சூடு சுரணை என்பார்கள்; வீரம் என்பார்கள். தங்களுக்குள் ஏகப்பட்ட சூட்டைக் கிளறிவிட்டுக் கொள்வார்கள். சூரியன் கன்னென்று பொசுக்கித் தள்ளுகிற சூடு போதாதென்று, இவர்களாக ஏற்படுத்திக் கொள்ளும் சூடு பயங்கரமாகப் பற்றி எரியத் தொடங்கும்.

தடி எடுத்தவனெல்லாம் தண்டல்காரனாகி விடுவான். ஒவ்வொருவனுக்கும் எப்படியோ ஆள் கூட்டம் சேர்ந்துவிடும். தோள் தட்டிக் கொள்வார்கள்; தொடை தட்டிக் கொள்வார்கள்; முட்டி மோதிக் கொள்வார்கள்; கட்டிப் புரண்டு உருள்வார்கள். வாளோடு வாள் மோதும்; வேலோடு வேல் பொருதும். இரத்தம் ஆற்று வெள்ளமாய்த் தரையில் பெருக்கெடுத்தோடும்; தீப்பந்தங்களைக் கொண்டு போய் இவன் அவன் வீட்டைக் கொளுத்துவான்; அவன் இவன் வீட்டைக் கொளுத்துவான்.



பெண்டுபிள்ளைகள் பாடு அதோ கதிதான். ஒரே அழுகுரல், பிலாக்கணம், ஒப்பாரி....

இப்படி ஒருவனை ஒருவன் அடித்து மண்டை உடைத்துக் கொள்வது அந்த ஊருக்கே ஒரு வழக்கமாகிவிட்டது. 'அடிதடியால் சாவதுதான் புகழ்' என்று அந்த ஊர்ப் புலவர்களும் உரத்த குரலில் பாடிக் கொம்பு சீவிவிட்டார்கள். 'புகழ்' தேடுவதற்கென்றே கொன்றவர்கள் பலர்; கொல்லப்பட்டவர்கள் பலர்.

காதலித்துக் கணக்கின்றிப் பிள்ளைகளைப் பெற்றுத் தருவதும், பெற்ற பிள்ளைகளைச் சண்டைகளுக்கு ஏவிவிட்டுச் சாகடிப்பதுமே போற்றுதற்குரிய செயலாக அந்த ஊரில் பேசப்பட்டது. எல்லோரும் ஒரே குடும்பத்தில் பிறந்தவர்கள் என்பதை அவர்கள் அறவே மறந்து போனார்கள். இவன் அவன் குலத்தை நாசம் செய்வதையே தன் வாழ்க்கையின் தலையாய கடமையாகக் கொண்டான். அதேபோல் அவனும் இவன் குலத்தை நாசம் செய்யாது போனால் தன்னால் பத்திரமாய் வாழ முடியாதென்று நம்பினான். ஒவ்வொருவனும் 'அடுத்தவன் குலநாசினி' என்று விருதுப் பெயர் சூட்டிக் கொள்வதில் பெருமை கொள்ளலானான்.

அந்த ஊர் ஆண்களில் இயற்கையாக வயது வந்து முதுமையில் இறந்தவர்கள் குறைவு தான். அப்படிச் சாவது அங்கே மிகவும் கேவலமாகக் கருதப்பட்டது. ஆடுவோர், பாடுவோர், புலவர், கலைஞருக்குத்தான் அங்கே இயற்கையான சாவு கிடைக்கும்.

ஆண்பிள்ளை என்று பிறந்து விட்டால் ஒன்று அவன் சண்டையில் அடுத்தவனைக் கொல்ல வேண்டும்; அல்லது அடுத்தவனால் கொல்லப்பட வேண்டும்.



கொலையே கலையாகி விட்ட ஊரில் ஆண்கள் குறைவாகவும், பெண்கள் அதிகமாகவும் இருப்பது இயல்புதானே? ஒவ்வொரு ஆணும் குறைந்தது ஒன்பது பெண்களையாவது மணந்து கொள்வான். கொலைக்களம் புகுவதற்கென்றே ஆண்களையும், களத்தில் கொலை செய்யப்பட்டவன் மேல் விழுந்து புரண்டு அழுவதற்கென்றே பெண்களையும் அவர்கள் பெற்றுத் தள்ளுவார்கள்.

காதல் செய்வது — சண்டைக்குப் போவது இந்த இரண்டையும் பற்றிப் புலவர்கள் எத்தனையோ விதமாகப் பாடுவார்கள். படுகளத்துக்குப் போகும் புலவர்களுக்கு வெற்றி பெற்றவன், தோல்வி அடைந்தவனின் சொத்தைச், சூறையாடித் தாராளமாகத் தான தருமங்கள் செய்வான்.

தடி எடுத்த தண்டல்காரனுக்கெல்லாம் எப்படி அடுத்தவனின் உயிர் மீது ஆசையோ அப்படியே தன் மீது ஒரு புலவன் கவி பாட வேண்டும் என்ற ஆசை. ஆகவே கவிகட்டுகிறவனின் பாடும் யோகம்தான். ஒருவன் தலையில் முடியும், கையில் தடியும் வைத்திருந்தால் போதும். அவனை வானத்துக்கே தூக்கிவைத்துப் பாட்டுப் பாடிவிடுவார்கள் புலவர்கள்.

இப்படியே அந்த ஊர் ஆற்றில் அந்த ஊர் ஆண்களின் இரத்தமும் கலந்து ஓடிக்கொண்டிருந்தது.

அந்த மண்ணின் சத்து அந்த ஊர் இளைஞர்களின் சடலங்களால் கொழுத்தது.

நாய்கள், நரிகள், கழுகுகள், கோட்டான்கள் இவை யெல்லாம் எங்கெல்லாமோ இருந்து வந்து அந்த ஊரைச் சுற்றிய காடுகளில் நிரந்தரமாகக் குடியேறிவிட்டன.

அடுத்த ஊர்க்காரன் பார்த்தான். அவனுடைய ஊரில் இவ்வளவு செழிப்பில்லை. அங்கே ஆறும் ஓடவில்லை; பருவ மழையும் பெய்யவில்லை; மண்ணும் மானம் பார்த்த மண்.

கையில் தானும் ஒரு தடியை எடுத்துக் கொண்டு தன்னுடைய ஊர் ஆட்களைத் திரட்டலானான்...

அடுத்த ஊர் ஆட்சன் பஞ்சத்திலடிபட்டு, பஞ்சத்தையே எதிர்த்துப் போராடி உரம் பெற்ற ஆட்கள். இயற்கை அவர்களிடம் கருணை காட்டாததால் அவர்கள் எந்த நேரமும் இயற்கையோடு கடுமையான போராட்டம் நடத்தி வாழ வேண்டியிருந்தது. இந்த இயற்கைத் துன்பமே அவர்களிடம் கஷ்டப்பட்டு உழைக்கும் ஆற்றலைத் தூண்டிவிட்டிருந்தது. ஒற்றுமை உணர்வை வளர்த்திருந்தது.

வாழ்க்கை முறையிலும் கலாசாரத்திலும் இந்த ஊர்க்காரர்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்த அவர்கள், தங்களுக்கு நல்லதொரு வாய்ப்பை அடுத்தவர்களின் உட்பகையில் கண்டு கொண்டார்கள்.

அண்ணன் தம்பிகள் சண்டையிலும் மாமன் மைத்துனன் சண்டையிலும் தங்களுக்கு வரவேற்பிதழ் வாசிக்கப்படுவது அவர்களுக்கு நன்றாகத் தெரிந்து விட்டது.

பெரியதோர் அணி திரட்டிப் பெரியதொரு படையெடுப்பு நடத்துவது கூட அவர்களுக்கு அவசியமாகப் படவில்லை. இரண்டு பேர் சண்டையில் எவரோ ஒருவன் பக்கம் சேர்ந்து கொள்வதாகச் சொல்லி முதலில் தந்திரமாகத் தூது அனுப்பினார்கள்.

''வாருங்கள், வாருங்கள், என் பங்காளியை ஒழித்துக்கட்ட என்னோடு துணைக்கு வாருங்கள்'' என்று வெற்றிலை பாக்கு வைத்து ஆவலோடு அழைப்பு விட்டான் ஒருவன். ''என் பங்காளியை மட்டும் நிர்மூலமாக நாசமாக்கிவிட்டால் நீங்கள் என்ன கேட்டாலும் தருகிறேன்!'' என்றான்.

அடுத்த ஊர்க்காரனின் வாசலை அதிர்ஷ்ட தேவதை தட்டத் தொடங்கி விட்டாள். குதிரைகளில் அவனுடைய ஆட்களை ஏற்றிக்கொண்டு உருவிய வாளோடு மளமளவென்று வந்து சேர்ந்தான் அவன். வந்தவன் இரண்டு பிரிவாய்த் தன் ஆட்களைப் பிரித்தான். பங்காளிக்கும் பங்காளிக்கும் நடந்த சண்டையில் ஒரு பங்காளியின் பக்கம் தன் படையினரில் பாதிப் பேரையும், மைத்துனனுக்கும் மைத்துனனுக்கும் நடந்த சண்டையில் தன் படையினரில் மறு பாதிப் பேரையும் சேர்ந்து சண்டை போடச் செய்தான்.

வெவ்வேறு பகுதிகளில் முட்டி மோதிக்கொண்டிருந்த பங்காளிகளில் ஒருவனும் மைத்துனர்களில் ஒருவனும் பூண்டோடு ஒழிக்கப்பட்டார்கள். அவர்கள் வீட்டுப் பெண்கள் சிறைப்பிடிக்கப்பட்டார்கள். கற்பழிக்கப்பட்டார்கள். அடிமைகளாக்கப்பட்டார்கள். பலவந்தமாக அடுத்த ஊரிலிருந்து வந்த அடியாட்களுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கப்பட்டார்கள்.

'வெற்றி பெற்ற' பங்காளியே அடுத்த ஊரானின் இந்த வெறித்தனம் கண்டு திகைத்தான். மைத்துனனும் மருண்டான்.

எங்கிருந்தோ வந்தவனைத் துணைக்கு வைத்துக்கொள்ளப் போய் அவன் என்னென்னவோ செய்கிறானே!

நரிக்கு அதிகாரம் கொடுத்தால் அது கிடைக்கு இரண்டு ஆடுகள் வீதம் லஞ்சம் கேட்குமாம். அடுத்த ஊரிலிருந்து வந்த இந்த ஓநாய்கள் கிடைக்கு இரண்டு ஆடுகளை மட்டும் கேட்கவில்லை. ஆடுகள், மாடுகள், பெண்டுகள், பிள்ளைகள், ஆடல்கள், பாடல்கள், சித்திரங்கள், சிற்பங்கள், கோவில்கள், குளங்கள் எல்லாவற்றையுமே பலிதனமாகக் கேட்டன.

கொலை, கொள்ளை, கற்பழிப்பு, கோவில் இடித்தல் இவையெல்லாம் அந்த ஊரில் அதன் பிறகு தாராளமாக நடந்தன.

வந்தவன் பிறகு தன்னை விருந்து வைத்து அழைத்தவன் மீதே திரும்பினான். பங்காளியும் பலியானான்; மைத்துனனும் மாண்டு போனான். அவர்களுடைய வீடுகளுக்கும் பெண்டுகளுக்கும், பிள்ளைகளுக்கும் அதே கதிதான் கிடைத்தது.

முன்பெல்லாம் கண்டும் கேட்டுமிராத அளவுக்கு அந்த ஊர் இழிவாகப்பட்டது. முடிந்தவர்கள் இரவோடு இரவாக ஆற்றைக் கடந்தார்கள். காடுகளுக்குள் ஓடி ஒளிந்தார்கள். அகற்கப்பாலும் சிதறி ஓடினார்கள், தங்கள் உயிரையும் மானத்தையும் காப்பாற்றிக் கொள்வதற்கு.

அம்மா ஏன்
அவங்க பாத்ரூம்
நாற்றமடிக்குது,
நம்முடையது
ஜம்முனு வாசனை-
யாயிருக்கு?

நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்
கண்ணு...



ஓடோனில் ஏர் ப்யூரிஃபையர், கக்கூஸ், பாத்ரூம், போன்ற இடங்களின் துர்நாற்றங்களை உடனடியாகப் போக்கி, தூய்மையாகவும் நன்மணத்துடனும் வைத்திருக்கிறது. பல மலர்களின் மணங்கள் உண்டு — லாவெண்டர், ஜாஸ்மின், மோக்ரா ... முதலியன — விரும்பியதை வாங்கலாம்.

பல சைசுகளிலும், வகைகளிலும் கிடைக்கிறது.

BALSARA

**பல்சாரா**
—சிறப்பாக வாழ
சொகுசான வசதிகள்

பல்சாரா & கம்பெனி
பிரைவேட் லிட்.,
43, [illegible] ஸ்ட்ரீட், பம்பாய்-1

AIYARS-BLS. 90 TM

மயக்குமெழில்
மலர்ச்சி

**ப்ரியதர்ஷினி**
வாயில்கள் மற்றும்

ஷர்மீளா செமி-ஃபுல் வாயில்கள்

**சுசித்ரா** எச். டி. வாயில்கள்

புஷ்பாஞ்சலி
வாஷ்-என்-வேர், சாயந்தோய்த்த கேம்பிரிக் வாயில்கள்

தி தாவண்கெரெ காட்டன் மில்ஸ் லிமிடெ
- பண்டைய மரபை இன்றைய
வடிவாய்ப் படைக்குமிடம்!

**தாவண்கெரே**
**துணிவகைகள்**

lam/dcm/2/72 tam

தண்ணீர் இல்லாக் காட்டிலிருந்து வந்த அந்த அடுத்த ஊர்க்காரன் இந்த ஊரின் சொந்தக்காரனுனான்; தலைவனானான்.

தன்னுடைய கலாசாரம், தன்னுடைய மொழி,—தான் கும்பிடும் சாமி இவற்றுக்கெல்லாம் கட்டுப்படாதவர்களின் தலை பத்திரமாக இருக்காது என்று பறையறிவித்தான். தலைவரி போட்டுத் தண்டனை விதித்தான்.—உயிருக்குப் பயந்தவர்களால் வேறு என்ன செய்ய முடியும்?

பொன் விளைந்த அந்தப் பூமி, இவ்வளவு கொடுமைகளுக்குப் பிறகும், வந்தவர்களுக்கெல்லாம் ஏராளமாக வாரி வாரிக் கொடுத்துக்கொண்டுதான் இருந்தது.

தோண்டத் தோண்டச் செல்வம்—

மாதம் மும்மாரி—

வளைந்தோடும் ஆறு—

விதை தூவினால் தலையில் தாங்கிச் சாய்ந்து கொடுக்கும் பயிர்க் கூட்டம்—

சுகமான சூரிய வெளிச்சம்—

சொகுசான காற்று—

'இவ்வளவு கொள்ளைகளுக்கும் கொலைகளுக்கும் இந்த மண் காரணமாக இருக்குமானால், இதனிடம் எவ்வளவு பெருஞ் செல்வம் இருக்க வேண்டும்?' இதைக் கணக்குப் போட்டார்கள் தொலைவான கடலில் திரிந்த வேறு சில கடற்கொள்ளைக்காரர்கள்.

முதலில் அந்த ஊரை ஆண்ட அடுத்த ஊர்க்காரனுக்குப் பரிசுப் பொருள் கொண்டு வருபவர்களைப் போல் ஒருசிலர் வந்தார்கள். பிறகு வியாபாரம் செய்ய வருகிறவர்களைப் போல் இன்னும் சிலர் வந்தார்கள். ஊருக்குள் உள்ள நிலவரங்களைக் கண்ணோட்டம் விட்டார்கள். இவ்வளவு அழிவுக்குப் பிறகும் ஊருக்குள் குவிந்து கிடக்கும் செல்வக் குவியலைக் கண்ணோட்டம் விட்டார்கள். அத்தோடு அங்கு நிலவிய உட்பகையும் அவர்கள் கண்ணில் பட்டது.

அடுத்த ஊர்க்காரனுக்கும் உள்ளூர்க்காரனுக்கும் புகைச்சல். அவனோடு பின்னே வந்தவர்களுக்கும் அவனால் தன் கட்சிக்கு மாற்றப்பட்ட உள்ளூர்வாசிகளுக்கும் பூசல். வந்தவன் கட்சியில் சேராமல் ஏற்கனவே உள்ளூர் வாசிகளாய் இருந்தவர்களுக்கும் புதிதாக வந்தவன் பக்கம் சாய்ந்தவர்களுக்கும் குமைச்சல். இப்படி அந்த ஊர்க்காரர்களைப் பிரித்து, ஆள்வதற்கும் பிடித்து நொறுக்குவதற்கும் அந்த மண்ணில் அற்புதமானதொரு வாய்ப்பிருந்ததை அந்தக் கடற்கொள்ளைக்காரர்கள் கண்டு கொண்டார்கள்.

மழையிலும் புயலிலும் அலையிலும் திரிந்து ஏன் கொள்ளையடிப்பதற்காக அவர்கள் இனி அவதிப்பட வேண்டும்? எப்போதாவது வரும் கப்பலை எதிர்நோக்கி வழிமறிப்பதற்கு ஏன் கடலில் எங்கெங்கோ அலைந்து திரிய வேண்டும்? 'தட்டுங்கள், திறக்கப்படும்; கேளுங்கள், கொடுக்கப்படும்' என்று சொல்லிக்கொண்டு இந்தப் பொன்விளையும் பூமிதான் தயாராகக் காத்திருக்கிறதே?

வியாபாரப் போர்வையில் வந்த கடற்கொள்ளைக்காரர்கள் பரிசாக அளித்த விலை உயர்ந்த மதுப் புட்டிகளும், அரம்பையர் போன்ற நங்கையர் கூட்டமும் ஊர்த் தலைவனைக் கிறங்கச் செய்தன.

## சுதந்திரத் திருநாள்



நாம் ஓர் இலட்சியத்தை அடைந்து விட்டோம். இந்த நினைவே நமக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. ஆனால் நம் பயணம் இன்னும் முடிவுறவில்லை. அது பூர்த்தியடைய இன்னும் எத்தனையோ கட்டங்கள் இருக்கின்றன. சுதந்திரம் புதுப்புது பொறுப்புக்களையும் சுமைகளையும் ஏற்படுத்துகிறது என்பதை நாம் மறக்கக் கூடாது. சுதந்திரம் என்பது ஆட்சிப் பொருள் மட்டும் அல்ல. மக்களுக்கு அதன் மூலம் நல்ல பலன் கிட்டவேண்டும். அதில்தான் சுதந்திரத்தின் உண்மை உருவம் இருக்கிறது. மக்கள் ஆட்சியில் நாம் என்ன செய்கிறோம், என்ன எண்ணுகிறோம் என்பது எப்பொழுதும் மக்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதோடு நமது காரியங்கள் மக்களுக்குப் பிடித்திருக்க வேண்டும். சொல்லப் போனால் அவர்களது யோசனையின் பேரில்தான் எந்தக் காரியமும் நடைபெற வேண்டும்.

ஆகஸ்ட் 15, 1947ல் நேருவின் பேச்சு

---

முதலில் வியாபாரம் செய்ய இடம் கொடுத்தான். பிறகு கோட்டைகள் கட்டிக்கொள்ள அனுமதி அளித்தான். அப்புறம் அவர்களுடைய சொந்த வழிபாட்டு முறைகளுக்கென்று சாமியார்களை இங்கு அழைத்துக் கொள்ள ஒப்பினான்.

பலன்?

திரும்பவும் பழைய கதையேதான்! கூட்டம் கூட்டமாகக் கப்பலில் வந்து இறங்கினார்கள் கடற் கொள்ளைக்காரர்களின் ஆட்கள். புதிய புதிய ஆயுதங்களை யெல்லாம் அவர்கள் கொண்டு வந்தார்கள். ஊருக்குள் புகுந்து ஏற்கனவே மக்களிடமிருந்த புகைச்சலை நன்றாக ஊதிவிட்டார்கள்.

பரம்பரையாய் அந்த மண்ணில் இருந்தவர்களிடம் 'அடுத்த ஊராரையும், அவனுடைய ஆட்களையும் நம்பாதீர்கள்' என்று தூபம் போட்டு விட்டார்கள். அடுத்த ஊரிலிருந்து வந்து குடியேறிவிட்டவர்களிடமும் அவர்கள் பக்கம் சேர்ந்து விட்ட உள்ளூர் வாசிகளிடமும், 'இந்த ஊர்க்காரனின் திமிர் அடங்கவில்லை; என்றைக்காவது உங்களை இவன் வெளியே விரட்டத்தான் போகிறான்' என்றார்கள்.

திரும்பவும் கலகம், கொலை, கொள்ளை, தீவைத்தல், சூறையாடல், கற்பழிப்பு—

கடற்கொள்ளைக்காரன் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு பக்கம் சேர்ந்து கொண்டான். ஒவ்வொரு பகுதியாகப் பிரித்துப் பிரித்து நொறுக்கினான். இவர்களில் சில பேரையும், அவர்களில் சில பேரையும் சொந்த மண்

னுக்குத் துரோகம் செய்யத் தூண்டித் தன்னோடு சேர்த்துக் கொண்டான்.

'பட்டப் பகலில் பகற்கொள்ளை!

கப்பல் கப்பலாகத் தன்னுடைய நாட்டுக்குச் செல்வங்களைச் சுரண்டி அனுப்பி வைத்தான் கொள்ளைக்காரன்.

இங்கே—

இருந்தவனும் எலும்புக் கூடானான்;—

வந்தவனும் சோர்ந்து போனான்;—

ஊர், கொள்ளைக்காரனுடைய கைக்கே போய்விட்டது.

ஓராயிரம் ஆண்டுகளுக்கு மேல் உட்பகையால் ஒற்றுமை கெட்டு உழன்ற பின்னர்,

இரு நூற்றாண்டுகளுக்கு மேல் கடற் கொள்ளைக்காரனின் பயங்கரமான அடக்குமுறை ஆட்சியில் அவதிப்பட்ட பின்னர்,

அந்த ஊரில் ஒரு மனிதன் தோன்றினான். உத்தமன் உருவானான்; மண் புழுவாய் நெளிந்த அந்த ஊர் மக்களை அவன் மனிதராக மாற்ற அரும் பாடு பட்டான். கோழைகளாகவும் அடிமைகளாகவும் மாற்றப்பட்டிருந்தவர்களின் நெஞ்சங்களில் குடிகொண்டிருந்த அச்சத்தை அடியோடு விரட்டியடிக்க முயன்றான்.

'இந்த மண் இங்கு வாழும் நம் அனைவருக்கும் சொந்தமான மண். ஏற்கனவே இங்கு காலங் காலமாய் இருந்தவர்களும் சரி, பல தலைமுறைகளுக்கு முன்னே இங்கு வந்தவர்களும் சரி, தங்களுடைய கலாசாரத்தையும் வாழ்க்கை முறைகளையும் மாற்றிக்கொண்டவர்களும் சரி, நாம் அனைவரும் ஒரு தாய் வயிற்று மக்கள். நாம் அனைவரும் ஒன்று பட்டு இந்தக் கொள்ளைக்காரனை எப்படியாவது விரட்டித் தீரவேண்டும்!' என்று அறைகூவல் விடுத்தான்.

'ஒன்றுபட்டால் நம் அனைவர்க்கும் வாழ்வு; ஒற்றுமை நீங்கில் நம் அனைவர்க்கும் சாவு—எது வேண்டும் நமக்கு?' என்று கேட்டான் அந்த வித்தகன்.

மிரண்டு நடுங்கினான் கொள்ளைக்காரன். ஊர் மக்கள் ஒன்று சேர்ந்துவிட்டால் தொலை தூரத்திலிருந்து வந்த அவனால் அங்கே என்ன செய்ய முடியும்? மக்கள் அனைவரையும் கொன்று குவித்து விட்டால் பிறகு உதைத்து அவர்களை உழைக்கத் தூண்டி அவர்கள் செல்வங்களைக் கொள்ளை கொண்டு போக முடியாதே!

பிரித்தாளும் தந்திரத்தால் சிலரைத் துரோகிகளாக மாற்றித் தன் பக்கம் சேர்த்துக்கொண்டான். குரைக்கும் நாய்களுக்கு எலும்புத் துண்டுகளை வீசி எறிவது போல் சிலருக்குப் பட்டம் பதவிகள் கொடுத்துப் பார்த்தான். வேறு சிலருக்குப் பணம் கொடுத்துத் தன் கையாட்களாக அமர்த்திக் கொண்டான்.

இவ்வளவு துரோகச் செயல்கள் நடந்தும் கூடப் பெருவாரியான மக்கள் விடுதலை கீதம் பாடிய அந்த வித்தகன் பின்னேதான் திரண்டார்கள்.

அப்படி எழுச்சி கொண்டு திரண்ட மக்கள் கூட்டத்தை....

அந்தக் கொள்ளைக்காரன் இரும்புப் பூண் போட்ட தடிகளால் அடித்து மண்டையை உடைத்தான்.

கூட்டத்தின் மேல் குதிரைப் படையை ஏவிவிட்டான்.

சிறைக்குள் தள்ளினான்.

செக்கிழுக்க வைத்தான்.

கல்லுடைக்கச் செய்தான்.

தூக்கில் போட்டான்.

துப்பாக்கியில் குண்டுகள் தீரும்வரையில் சுட்டுத் தள்ளினான்.

இவ்வளவும் நடந்த பிறகும் மக்கள் கூட்டம் கலங்கவில்லை. ஒற்றுமையின் வலிமையை அது கண்டு கொண்டது. தியாகத்தின் சக்தியை அது உணர்ந்து கொண்டது. அஞ்சாமையின் ஆற்றலை அது அநுபவித்து விட்டது.

வேறு வழியில்லை கொள்ளைக்காரனுக்கு. ஊரை ஊர்க்காரர்களிடம் விட்டு விட்டு அவன் கப்பலேறினான். அப்போது அவன் ஆத்திரம் மட்டும் நீங்கவில்லை. தன்னோடு சேர்ந்து கொண்டு மக்களுக்குத் துரோகம் செய்தவனிடம் கண்ணைக் காட்டிவிட்டுத் தான் அவன் கப்பலேறினான்.

'துரோகிகளே! ஒற்றுமையை எப்பாடு பட்டாவது குலைத்து விடுங்கள். உங்கள் இனம் ஒற்றுமை கெட்ட இனம். நீங்கள் இந்த வேலையை மட்டும் செய்துவிட்டால் அப்புறம் நானே வருவேன்; அல்லது எங்கிருந்தாவது வேறு கொள்ளைக்காரன் வருவான். உங்களுக்கு நல்ல ஊதியம் கிடைக்கும்!' என்று சொல்லாமல் சொல்லிவிட்டுப் போய்விட்டான் அவன்.

கொள்ளைக்காரன் போன பிறகு...

ஊர் ஒரு வழியாகத் தலையெடுக்கத் தொடங்கியது. ஊருக்கென்று ஒரு தலைமையை வைத்துக் கொண்டு, தெருத் தெருவாகப் பிரித்து, அங்கங்கே உள்ளவர்கள் தங்கள் தெருவைக் கவனித்து வரலானார்கள்.

ஆண்டாண்டு காலமாய் அடிமைப்பட்டுச் சுரண்டப்பட்டு வந்த ஊர் அது. ஒற்றுமையின் அடித்தளமே தகர்க்கப்பட்டு உருக்குலைந்து கிடந்த மண் அது. எவ்வளவோ இயற்கைச் செல்வம் அதனிடமிருந்தும் எத்தனையோ உழைக்கும் கரங்கள் அதனிடமிருந்தும், அதன் வளர்ச்சிக்கு எத்தனையோ முட்டுக்கட்டைகளும் இருந்தன.

ஊர் மக்களில் பாதிப் பேருக்கு மேல் உழைப்புக்கும் பிழைப்புக்கும் சரியான வழியில்லை. வாய்ப்பும் வசதியும் கிடைத்தவன் அகப்பட்டதையெல்லாம் தனக்கும் தன் குடும்பத்துக்கும் என்று பதுக்கலானான். பழைய துரோகிகளும் சமூக விரோதிகளும் புதிய வேஷம் போட்டுக்கொண்டு திரியலானார்கள்.

இதற்கிடையில் கிழக்கே இருந்து ஒரு பகைவன் அந்த ஊருக்கு முளைக்கலானான். மேற்கே இருந்து மற்றொருவன் முளைத்தான். அந்த இரண்டு பகைவர்களும் திடீரென்று ஒன்று சேர்ந்து விட்டார்கள். அவர்களிடம் நவீன ஆயுதங்கள், குண்டு போட விமானங்கள் எல்லாம் இருந்தன. அந்த ஊர் மறுமலர்ச்சி பெற்றுச் சிறிது சிறிதாகத் தலையெடுத்து வருவது அவர்களுக்குப் பிடிக்கவில்லை.

இரண்டு பகை இரு பக்கத்திலும் இருக்கும் போதே, திடீரென்று அந்த ஊரின் ஒரு தெரு

# தடுமாறாமல் நொடியில் கிளம்புங்கள்

## மற்றவர்களைவிட முன்னால் இருங்கள் —எப்பொழுதும்



கூடுதலான சக்தியைதரும்

# ஆம்கோ பாட்டரியுடன்

மிடுக்கு தேவை. காரியத்தைச் சாதிக்க கிளம்புகையில் தடுமாறி சங்கடப்படாதீர்கள். ஒரு பாட்டரி வாங்க எண்ணம் பெறும்போது, 'கூடுதலான சக்தியை தரும்' ஆம்கோ பாட்டரியைத் தவிர வேறு எதையும் சட்டை செய்யாதீர்கள். பாட்டரி கோளாறு என்ற பிரச்னையை நீங்கள் மறந்து விடலாம். கார் ஓட்டுவதை இன்பகரமானதாக ஆக்கிக் கொள்ளுங்கள.

ஒவ்வொரு ஆம்கோ பாட்டரியும் — உங்களுடைய பாட்டரிக்கு மிகவும் தேவையான அந்த வலுவையும், நீண்ட ஆயுளையும் அளிக்க — நவீன ஆராய்ச்சி அபிவிருத்தி, சிறப்பான என்ஜினீரிங் திறன், கடுமையான தரக்கட்டுப்பாடு, கிட்டத்தட்ட 40 வருட கால அனுபவம் ஆகியவற்றால் ஆனது.




**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட்,**
யூனிடி பில்டிங்ஸ், பெங்களூர்-2.

MAC (B) AM-97 TAM

வில் கலவரமும் அடிதடியும் ஆரம்பமாகி விட்டன. ஒரு தெருவைச் சேர்ந்தவர்களே அவர்களுக்குள் அடித்துக் கொண்டு அங்கங்கே தெருவோரங்களில் செத்துக் கிடந்தார்கள்.

மற்றொரு தெருவிலிருந்து குபீரென்று ஒரு புதுக் குரல் கிளம்பியது: 'ஒவ்வொரு தெருவுக்கும் தனி ஆட்சி கொடு' 'என் தெருவுக்குச் சுய ஆட்சி கொடு!'

'கொடுக்கா விட்டால் தெருவையே பிரித்துத் தனிக்கொடி நாட்டுவேன்!' என்றது மற்றொரு குரல்.

நெடுநாட்கள் அந்த ஊரில் வாழ்ந்து, ஊராரின் ஒற்றுமை கெட்டதால் பல துன்பங்கள் நேர்வதைக் கண்டிருந்த ஒரு கிழவர், கோலூன்றிக் கொண்டே மெல்லத் தெருவுக்கு வந்தார்.

குரல் வந்த திசையில் திரும்பி, ''இதற்கென்னப்பா இப்போது அவசியம் வந்தது?'' என்று கண்களை இடுக்கிக்கொண்டு கேட்டார்.

''அதிகமான அதிகாரம் எனக்கு வேண்டும். எனக்கு அதிகமான பணம் வேண்டும்!''

''ஓ, பணம்! பணம் பண்ண அதிகாரம்? இதற்குத்தானா தெருவுக்குத் தெரு தனி ஆட்சி?''

''ஆமாம்!''

''வேண்டாம்பா இது ரொம்ப ஆபத்தான விளையாட்டு. இந்த விளையாட்டினாலே இந்த ஊர் பட்டிருக்கிற பாடு இருக்கே, இது உனக்குத் தெரியாது. நீ சிறு பிள்ளை.''

''போடா, கிழட்டுப் பயலே!'' — கிழவரின் முகத்தில் ஓங்கி ஒரு குத்து விழுந்தது. கிழவரின் கைத்தடி காற்றில் பறந்தது. நடுத் தெருவில் புரண்டார் அவர்.

''தம்பி! கோவிச்சுக்காதே! உனக்கு மாத்திரம் இதைச் சொல்லலே; ஊருக்கே பொதுவாச் சொல்றேன்... உள்ள அதிகாரத்தையும் உள்ள பணத்தையும் ஒழுங்கா வைச்சுக்கிட்டு, இந்த ஊர் ஜனங்களை நல்லாக் காப்பாத்தறது எப்படீன்னு நீ முதல்லே தெரிஞ்சுக்கணும். நீ மாத்திரமில்லே, இந்த ஊரிலே அதிகாரம் நடத்தற எல்லாரும் தெரிஞ்சுக்கணும்... இல்லேன்னா மறுபடியும் எவனாவது ஒரு கொள்ளைக்காரன் நம்ம தலையிலே ஏறி உட்கார்ந்து அதிகாரம் செய்ய எங்கேயிருந்தாவது வந்திருவான்.... கவனமாப் பொழைச்சுக்குங்க... ஆமா!''

கிழவர் தட்டுத்தடுமாறி எழுந்தார்; நடக்க முயன்றார். தம் கைத்தடியைத் தேடினார்.

கூட்டுக் குடும்பமாக உருவாகிக் கொண்டு வரும் அந்த ஊர் தன் பழைய தவறுகளை உணர்ந்து ஒற்றுமையோடு வாழப்போகிறதா? அல்லது மறுபடியும் சிதறுண்டு சரியப் போகிறதா என்ற கவலை அவர் கண்களில் நிழலாடியது.

# அமெரிக்கத் தேர்தலில் தமிழக டாக்டர் பங்கு

அமெரிக்க ஜனாதிபதி தேர்தலுக்கு டெமாக்ரேடிக் கட்சியின் சார்பில் போட்டியிடுபவர் ஜார்ஜ் மெக்கவர்ன். டெமொக்ரேடிக் கட்சியின் தலைவராக இவர் தேர்ந்தெடுக்கப்பட உதவியவர்களுள் முக்கியமான ஒருவர் டாக்டர் ஜெயபதி. ஆம், ஒரு தமிழர் தான்! சென்னை நகரத்தில் பிறந்தவர், அமெரிக்காவில் நிலையாகக் குடியேறிவிட்டார். ஆனால் தமிழ் நாட்டினை நினைக்காத நாளில்லை என்கிறார்.

அமெரிக்க அரசியலிலும் அவர் ஒரு தனி இடம் பெற்றுள்ளார். அண்மையில் புளோரிடா மாநிலத்தில் மியாமி கடற்கரையில் நடைபெற்ற ஜனநாயகக் கட்சி மாநாட்டில் வடக்கு டகோட்டா பிரதிநிதிகள் குழுவின் தலைவராகப் பணியாற்றியபோது, கோடிக்கணக்கான அமெரிக்க மக்கள் அவரை டெலிவிஷன் மூலம் அறியலாயினர். சென்னையில் தியாகராய நகரில் அவரது தந்தை எம். பாலகிருஷ்ணன் வாழ்கிறார். சென்னையிலேயே இரு சகோதரிகளும், இரு சகோதரர்களும் இருக்கிறார்கள். இவர்களைப் பார்க்க ஆண்டுக்கொரு முறை ஜெயபதி இங்கு வருவதுண்டு.

டாக்டர் ஜெயபதி ஓர் இ. என். டி. (காது, மூக்கு, தொண்டை) வல்லுநர். மினட் நகரில் ஒரு மருத்துவ மனையில் அவர் பணியாற்றுகிறார். இம்மருத்துவ மனையில் அவர் ஒரு பங்காளி.

மருத்துவத் தொழில் நடத்துவதற்கும், தனது குடும்பத்தை நல்லபடியாக முன்னுக்குக் கொண்டு வருவதற்கும் மிகச் சிறந்த சூழ்நிலைகள் இருந்ததே தாம் அமெரிக்காவில் குடியேறக் காரணம் என்று அவர் கூறுகிறார். அவருக்கு மனைவியும் மூன்று குழந்தைகளும் உண்டு. ஜெர்மனியிலிருந்து வந்து குடியேறியவர் அவரது மனைவி. சென்னை வரும் போதெல்லாம் குடும்பத்தோடு வருகிறார்.

அமெரிக்கா தமக்கு வாழ்வளித்து வருவதற்காகத் தாம் கடமைப்பட்டுள்ளதாகவும், இந்தக் கடமையுணர்விலிருந்தும் பிறந்ததே ஜனநாயகக் கட்சி அரசியலில் தமக்குள்ள ஆர்வம் என்றும் டாக்டர் ஜெயபதி கூறுகிறார்.

''இந்நாட்டின் விஞ்ஞான வெற்றிகளோ, இங்குள்ள கார்களோ, தொழில்களோ அல்லது நம் கவனத்தை வெகுவாகக் கவரும் எவையானாலும் சரி, அவற்றைக் கைகூடுமாறு செய்துள்ளது இந்நாட்டு அரசியல் முறைதான். இந்த முறைக்கு என்னாலானதைச் செய்வது என் கடமை என நினைத்தேன். எனவேதான் அரசியலில் நான் நேரடியாகப் பங்கு கொண்டுள்ளேன். இதுவே நன்றி பாராட்டும் என் வழி'' என்று உணர்ச்சியோடு கூறுகிறார், டாக்டர் ஜெயபதி.





# சத்திய வெள்ளம்

## ஆறுவது அத்தியாயம்

லேக் வியூ ஹோட்டல் முகப்பில் அந்தச் சுகமான குளிர்ந்த மருள் மாலை வேளையில் பாண்டியன் கூறிய இந்த ஒரு வாக்கியத்தினால் விளைந்த மகிழ்ச்சி மயக்கத்திலிருந்து விடுபட்டு மறக்க முடியாமல் எங்கினாள் கண்ணுக்கினியாள். பாண்டியன் உட்புறம் சென்ற பின், யார் யாரோ வந்தார்கள். ரோஜாப் பூவும், கல்கண்டும் எடுத்துக் கொண்டு போனார்கள். அவனே தான் விளையாட்டாகப் புகழ்ந்து விட்டுப் போன ஒரு வாக்கியத்தினால் அவள் மனத்துக்குள் ரோஜாப்பூவின் மென்மையையும், கல்கண்டின் இனிமையையும் உணரச் செய்திருந்தான். முன்புறம் வரவேற்பு முடிந்து உள்ளே போய் விருந்தில் அமர்ந்தபோதும், விருந்து முடிந்த பின்பும் கூட அதை அவளால் மறக்க முடியாமலிருந்தது. சக மாணவிகளிடம் பேசும்போதுகூட அவள் இந்த ஞாபகத்

நா. பார்த்தசாரதி

திலேயே இருந்தாள். 'இதில் எது கை? எது ரோஜாப்பூ? இரண்டும் ஒரே நிறத்தில் இருப்பதால் புரியவில்லை.'— இந்தத் தொடர்கள் அவளுக்கு மனப் பாடமே ஆகிவிட்டன. பாண்டியன் புகழ்ந்த இந்தப் புகழ்ச்சி இதமான தென்றலைப் போல் அவளுள்ளே வீசிக் கொண்டிருந்தது.

முதலில் தேநீர் விருந்து முடிந்ததும் தொடங்கிய பாராட்டுரைக் கூட்டத்திற்குப் பாண்டியன் வரவேற்புரை கூறினான். மல்லிகைப்பந்தல் பல்கலைக் கழகத்தின் எல்லாப் பிரிவு மாணவர்களின் சார்பிலும் ஒவ்வொரு பிரதிநிதிகள் வீதம் மணவாளனைப் பாராட்டிப் பேசினார்கள். நாட்டில் அப்போதிருந்த எல்லா முக்கிய அரசியல் இயக்கங்களின் சாயல்களும் மாணவர்களிடமும் இருந்தன. அன்பரசன் குழுவினர் மட்டும் தனி. அவர்கள் அங்கே தென்படவே யில்லை. எல்லாருடைய பாராட்டுரைகளும் முடிந்த பின் மல்லிகைப்பந்தல் நகரத் தேசிய இயக்கத்தின் சார்பில் அண்ணாச்சி மணவாளனுக்கு மாலை சூட்டினார். முடிவில் மணவாளனின் பதிலுரை மிகவும் உருக்கமாக இருந்தது.

''இந்த அலாரம் கடிகாரம் உங்களை விழிப்பூட்டவோ நினைவூட்டவோ மணியடித்து ஒலிக்கும்போதெல்லாம் எங்கள் நினைவும் பல்கலைக் கழக நினைவும் வர வேண்டும்'' என்று மாணவர்கள் சார்பில் ஓர் அலாரம் கடிகாரத்தை மணவாளனுக்கு வழங்கினான் மோகன்தாஸ். விழா முடிந்ததும் மாணவிகள் அவசர அவசரமாக விடுதிக்குத் திரும்பவேண்டியிருந்தது. வழக்கமாகத் திரும்பும் நேரமாகி விட்டது. எல்லா மாணவர்களும் கூட்டமாக மணவாளனைச் சூழ்ந்து நின்று பேசிக் கொண்டிருந்ததனால் பாண்டியனைக் கண்டுபிடித்துச் சொல்லிக் கொள்ள முடியாமலே சக மாணவிகளோடு விடுதிக்குத் திரும்பினாள் கண்ணுக்கினியாள்.

பல்கலைக் கழக மாணவர் பேரவைத் தேர்தலில் அவர்களுக்கு வழிகாட்டி உதவுவதற்காக மணவாளனை மேலும் ஓரிரு நாள் மல்லிகைப்பந்தலில் தங்கி விட்டுப் போகுமாறு வற்புறுத்தினார்கள் மாணவர்கள். மணவாளனும் அதற்கு இணங்கினார். சில காரணங்களை முன்னிட்டுப் பல்கலைக் கழக எல்லைக்குள்ளேயோ விடுதியிலோ அவர் தங்க விரும்ப வில்லை. மாணவர்களுக்குச் செலவு வைக்காமல் அண்ணாச்சி கடையிலேயே பின்புறத்து அறையில் தங்கிக் கொள்வதாக மணவாளன் கூறியும் கேட்காமல் அன்றே அப்போதே பிரிவுபசார விருந்து நடந்து முடிந்த அதே லேக்வியூ ஹோட்டலில் மணவாளனுக்கு ஓர் அறை ஏற்பாடு செய்து கொடுத்தார்கள் மாணவர்கள். விருந்து முடிந்ததும் அண்ணாச்சியின் கடைக்குத் திரும்பாமல் அப்படியே ஹோட்டல் அறையில் தங்கினார் மணவாளன். ஒரு மாணவனை அனுப்பித் தம் கடையிலிருந்த மணவாளனின் சூட்கேஸை எடுத்து வரச் செய்தார் அண்ணாச்சி.

ஏற்கெனவே திட்டமிட்டபடி பேரவைத் தேர்தலை நடத்தத் துணைவேந்தர் இணங்கியிருந்ததனால் அதற்காக இன்னும் சில நாட்கள் அவர்கள் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது.

வேட்பாளர்கள் நாளை மாலை ஏழு மணிவரை மனுக்களைத் திரும்பப் பெறலாம். அடுத்த நாள் வேட்பாளர்களின் முடிவான பெயர்ப் பட்டியல் அறிவிக்கப்படும். அதற்கு அடுத்த நாள் தேர்தல் நடந்து முடியும். இந்த நிலைமைகளை எல்லாம் மணவாளனிடம் கலந்து பேசினார்கள் அவர்கள். இரவு உணவையும் லேக்வியூ ஹோட்டலிலேயே முடித்துக் கொண்டு பாண்டியனும் மோகன்தாஸும் விடுதிக்குத் திரும்பும்போது பத்தரை மணிக்கு மேலாகியிருந்தது. நிறைய மாணவர்கள் உடனிருந்ததால் எல்லாருமாகச் சேர்ந்து திரும்பினார்கள்.

''பாண்டியன்! இந்தத் தேர்தல் முடிகிறவரை நீயும் மோகன்தாஸும் நண்பர்களும் மிக மிகக் கவனமாக இருக்க வேண்டும். எவ்வளவோ ஆபத்துக்கள் வரும். கடந்த சில ஆண்டுகளில் நம் பல்கலைக் கழகத் தேர்தல்கள் பொதுத் தேர்தல்களை விட அபாயகரமான



தாகி யிருக்கிறது'' என்று மறுபடியும் அவர்கள் புறப்படும்போதும் எச்சரித்து அனுப்பினார் மணவாளன்.

''அண்ணனுக்கு என்ன உதவி தேவையானாலும் உடனே எனக்குச் சொல்லி அனுப்பணும்'' என்ற வேண்டுதலோடு மணவாளனிடம் விடைபெற்றான் பாண்டியன். பல்கலைக் கழக எல்லைக்குள் வந்ததும் மாணவர்கள் அவரவர்கள் விடுதிகளுக்குப் பிரிந்தார்கள்.

பொன்னையா முன்பே திரும்பி வந்து நன்றாகத் தூங்கி விட்டதால் பாண்டியன் அதிக நேரம் தட்டிய பின்பே அவன் எழுந்து வந்து கதவைத் திறந்தான். குளிர் அடங்க முழுக்கை உல்லன் அங்கியை அணிந்து கொண்டு படுத்த சிறிது நேரத்துக்கெல்லாம் பாண்டியனும் நன்றாகத் தூங்கிவிட்டான். காலையிலிருந்து நிறைய அலைந்ததாலும் வெடவெடக்கும் குளிரில் நடந்து வந்து அறையின் உள்ளே கம்பளிப் போர்வைக்குள் உடலை நுழைத்த வெதுவெதுப்பிலும் உறக்கம் கெஞ்சிக் கொண்டு வந்து அயரச் செய்திருந்தது. அந்தத் தன்னை மறந்த தூக்கத்தில் அவன் ஒரு கனவும் கண்டான். தனிமையான அந்தக்



கனவில் நேரம் வளர்ந்ததே தெரியவில்லை.

* * *

பேரவைத் தேர்தலில் அவன் வெற்றி பெற்றதைப் பாராட்டி மாணவர்கள் அளிக்கும் ஒரு பாராட்டுத் தேநீர் விருந்தில் மாணவிகள் சார்பில் அவனுக்கு அணிவிக்க ஒரு ரோஜாப்பூ மாலையோடு எதிரே வருகிருள் கண்ணுக்கினியாள். அப்போது அவள் ஸ்லீவ்லெஸ் அணிந்திருந்ததால் செழுமையான பொன் நிறத் தோள்கள் பச்சை மூங்கிலாய்த் தளதளவென்று மின்னுகின்றன. அந்த வேளையில் அவன் அவளிடம், "கண்ணே! இதில் எது கை? எது ரோஜாப்பூ? இரண்டும் ஒரே நிறத்தில் இருப்பதால் புரியவில்லை!" என்று அதே பழைய வாக்கியத்திறல் வினவுகிருன். ரோஜாப் பூக் கன்னங்கள், ரோஜாப்பூச் செவ்விதழ்கள், ரோஜாப்பூக் கைகள் என்று அவளே ஒரு ரோஜா மாலையாய் மற்றெரு ரோஜா மாலையை வீணே கையில் சுமந்து கொண்டு தன்னெதிரே நிற்பது போல் அவனுக்குத் தோன்றுகிருன்:

"மணமும் நிறமும் கவர்ச்சியும் உள்ள ஒரு மாலை இப்படி மற்றெரு மாலையைச் சுமந்துகொண்டு வரலாமா?"

"போதும் நிறுத்துங்கள்! உங்களைப் போல் கவிகள் அபாயமானவர்கள். வசீகரமான வார்த்தைகளால் எதிரே வருகிறவர்களை நிச்சயமாகத் தங்களுக்கு அடிமைப்படுத்தி விடுகிருர்கள்."

"இல்லை! நீ சொல்வது தவறு. ஒவ்வோர் அழகிய பெண்ணுமே ஒரு கவிதை தான். அவளை மீறிய மற்றெரு கவிதையை வெறும் வார்த்தைகள் உண்டாக்கிவிடப் போவதில்லை."

வெளியே அறைக் கதவு பலமாகத் தட்டப்படவே தூக்கமும் கனவும் கலைந்து போயின. இந்த அகாலத்தில் கதவைத் தட்டுவது யாராக இருக்கும் என்ற சந்தேகத்தோடு சுவரில் தடவிச் சுவிட்சைப் போட்டான் பாண்டியன். பொன்னையாவும் அப்போதுதான் கட்டிலில் எழுந்து உட்கார்ந்திருந்தான். கைக் கடிகாரத்தை எடுத்துப் பார்த்ததில் மணி மூன்றரை ஆகியிருந்தது. பாண்டியன் உட்புறத் தாழ்ப்பாளை நீக்கி அறைக் கதவைத் திறந்ததும் சில்லென்று மலைக் காற்று ஈர வாடையோடு வந்து முகத்தில் மோதியது. ஹோட்டல் யூனிபாரத்தில் லேக்வியூ ஹோட்டலின் ரூம் பாய் ஒருவன் அறை வாசலில் நின்று கொண்டிருந்தான்.

"மணவாளன் சார்! உங்களை உடனே கூட்டிக் கொண்டு வரச் சொன்ருரு. ஏதோ அவசரமா இன்னிக்கு அஞ்சு மணி பஸ்ஸுக்கே அவர் மதுரை போகணுமாம்."

மல்லிகைப்பந்தலில் இரண்டு மூன்று நாட்கள் தங்கிவிட்டுப் போவதாகச் சொல்லிய மணவாளன் உடனே திரும்பும்படி என்ன அவசரம் வந்திருக்க முடியும் என்று பாண்டியன் மனத்தில் சந்தேகம் எழுந்தது. அந்தச் சந்தேகத்தைத் தேடி வந்திருக்கும் ஹோட்டல் ஊழியனிடம் கேட்டுப் பயனில்லை என்பதால் மப்ளரை எடுத்துக் கழுத்தைச் சுற்றி அணிந்து கொண்டு காலில் செருப்பையும் மாட்டிக் கொண்டு பாண்டியன் புறப்பட்டான். "நானும் கூட வரட்டுமா?" என்று உடன் புறப்படத் தயாரான பொன்னையாவை, "வேண்டாம்! நீ தூங்கு பொன்னையா! நான் போய்ப் பார்த்து விட்டு வந்து விடுகிறேன்" என்று பாண்டியனே தடுத்து விட்டான். பாண்டியனை அனுப்பி விட்டு அறைக் கதவைத் தாழிட்டு விளக்கை அணைத்த பின் படுக்கையில் சாய்ந்த பொன்னையா விடிந்து ஏழு ஏழரை மணிக்குத்தான் எழுந்திருந்தான்.

காலை எட்டு மணிக்குப் பல்கலைக் கழக எல்லையிலேயே வட பகுதியில் இருந்த மருத்துவக் கல்லூரி விடுதியில் ஒரு நண்பனைப் பார்க்கப்போக வேண்டியிருந்தது பொன்னையாவுக்கு. காலை மூன்றரை மணிக்கு மணவாளன் கூப்பிட்டனுப்பிப் புறப்பட்டுச் சென்ற பாண்டியன் இன்னும் அறைக்குத் திரும்பி வந்து சேரவில்லை. போகும்போது பாண்டியன் அறைச் சாவியை எடுத்துச் செல்லவில்லை என்பதை அவனுடைய சாவி படுக்கை மேல் கிடந்ததிலிருந்து புரிந்து கொள்ள முடிந்தது. எதற்கும் அவன் திரும்பி வந்தால் பக்கத்து அறையில் கேட்டு வாங்கிக் கொள்ளட்டும் என்ற எண்ணத்தில் ஒரு சாவியை அங்கே எடுத்துக் கொடுத்து விட்டு, மற்றெரு சாவியால் அறையைப் பூட்டிக்கொண்டு புறப்பட்டான் பொன்னையா.

அந்த அதிகாலை வேளையில் மரங்கள் அடர்ந்த பல்கலைக் கழகச் சாலை வழியே மருத்துவக் கல்லூரி விடுதிக்கு நடந்து செல்வது மிகவும் சுகமான அநுபவமாக இருந்தது. வழி நெடுக இருபுறமும் பூங்காக்கள், அளவாகக் கத்திரித்து விடப்பட்ட செடிகள், பூக்கள் என்று கண்கொள்ளாக் காட்சியா யிருந்தது. அந்த வைகறை வேளையில் கட்டிடங்கள், விடுதிகள், மரங்கள், செடி கொடிகள், மலர்கள் எல்லாம் ஆடாமல் அசையாமல் யாரோ தயாராக எடுத்துக் காட்சிக்கு வைத்த வண்ணப் புகைப்படம்

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி ® நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு. இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது.

தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மெண்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53






UPL/6546

போயிருந்தன. ஃபைன் ஆர்ட்ஸ் பிரிவுக் கட்டிடங்களுக்கும், மருத்துவக் கல்லூரிக்கும் நடுவே இருந்த மிகப் பெரிய திறந்தவெளி அரங்கைக் கடந்து சென்றபோது அதே சாலையில் தனக்குச் சிறிது தொலைவு முன்னால் நாலைந்து மாணவர்களோடு மணவாளன் நடந்து போய்க் கொண்டிருப்பதையும் அந்த நாலைந்து பேரில் பாண்டியன் இல்லை என்பதையும் கவனித்தான் பொன்னையா. ஹோட்டல் ஊழியன் வந்து சொன்னது போல் மணவாளன் அவசரமாக மதுரைக்குப் புறப்பட்டுப் போகவில்லை என்று தெரிந்தது. ஒரு வேளை மணவாளனே தம் காரியமாகப் பாண்டியனை வேறெங்காவது அனுப்பியும் வைத்திருக்கக் கூடும் என்று எண்ணியபடி முன்னால் நடந்து போய்க் கொண்டிருந்த அவர்களை எட்டிப்பிடிக்க விரைந்து நடந்தான் பொன்னையா.

ஐந்தே நிமிஷங்களில் பொன்னையா அவர்களோடு போய்ச் சேர்ந்துகொள்ள முடிந்தது. மணவாளனுக்கும், நண்பர்களுக்கும் வணக்கம் தெரிவித்துவிட்டு, அவர்களோடு சிறிது தொலைவு நடந்தான். திறந்தவெளி அரங்கின் வடகோடியிலிருந்த காவல் கூர்க்காவின் பூத் அருகிலே 'ஆடியோ-விஷுவல்' ஏற்பாட்டின் கீழ் இரண்டு மூன்று தினங்களில் மாணவர்களுக்குக் காட்டப்பட இருந்த ஒரு திரைப்படம் பற்றிக் கரும் பலகையில் அறிவிப்பு எழுதி வைக்கப் பட்டிருந்தது. அவர்கள் அதைப் படிக்க ஓரிருகணங்கள் தயங்கி நின்றார்கள். அப்போது பொன்னையா, ''நீங்கள் அவசரமாக ஊருக்குப் புறப்படப் போவதாக லேக் வியூ ஹோட்டல் ஆள் வந்து பாண்டியன் அண்ணனை மூன்றரை மணிக்கே கூப்பிட்டானே? அண்ணன் எங்கே?'' என்று மணவாளனைக் கேட்டான். பொன்னையாவின் வார்த்தைகளைக் கேட்டு மணவாளனின் முகத்தில் சந்தேகமும் குழப்பமும் நிலவின.

''நீ என்னசொல்கிறாய் பொன்னையா? நான் பாண்டியனை நேற்றிரவு விடை கொடுத்து அனுப்பியதற்கு அப்புறம் பார்க்கவே யில்லையே? நான் அனுப்பியதாக யாரோ வந்து அதிகாலை மூணரை மணிக்குக் கூப்பிட்டதாகச் சொல்கிறாயே, அது யார்?''

இதைக் கேட்டுப் பொன்னையா அப்படியே மலைத்துப் போய் நின்றுவிட்டான். உடனே மணவாளனும் மற்ற மாணவர்களும் பரபரப்படைந்து அவசரமாகப் பொன்னையாவிடம் நடந்ததை யெல்லாம் விசாரித்தார்கள். அவனும் எல்லாவற்றையும் சொன்னான்.

''நேற்றிரவு நான் எவ்வளவோ எச்சரித்து அனுப்பினேன். அவ்வளவும் பயனற்றுப் போயிற்று. பாண்டியன் ஏமாந்து விட்டான். மோசம் போய் விட்டான். விரோதிகள் அவனுக்காக விரித்த வலையில் சரியாகப் போய் விழுந்து விட்டான்'' என்றார் மணவாளன். உடனே தாங்கள் போய்க் கொண்டிருந்த காரியங்களை யெல்லாம் விட்டு விட்டுப் பாண்டியனைத் தேடுவதற்காக விரைந்தார்கள் அவர்கள். மோகன் தாஸின் அறை, அண்ணாச்சி கடை, லேக் வியூ ஹோட்டல், எல்லா இடங்களிலும் தேடியும் விசாரித்தும் ஒரு பயனும் விளையவில்லை. பாண்டியன் எங்கெங்கே போவான், யார் யாரோடு பழகுவான் என்று யோசித்து யோசித்து ஒவ்வோர் இடமாக விசாரித்தும் அவனைப் பற்றி அப்போது எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லை. நண்பர்கள் துணுக்குற்றார்கள். மணவாளன் அதிர்ந்துபோய் உட்கார்ந்து விட்டார்.

## சத்திய வெள்ளம்

வாக்குரிமை ஜனநாயகம் இவை எல்லாம் மன வலிமையும் சகிப்புத் தன்மையும், நிதானமும் உள்ளவர்களின் உரிய சாதனங்கள். அவை இங்கே வெறும் உடல் வலிமையும் முரட்டுத்தனமும் உள்ளவர்களிடம் சிக்கிக் கொண்டிருக்கின்றன.

''பாண்டியன் எத்தனை பெரிய சாமர்த்தியசாலி என்று நான் நினைத்தேனோ, அத்தனை பெரிய ஏமாளியாக முன் யோசனையின்றிப் போய் மாட்டிக் கொண்டு விட்டான். இவ்வளவுக்கும் இந்தப் பல்கலைக் கழகத்தில் தேர்தலுக்குச் சில நாட்களுக்கு முன்பாக எப்படிப்பட்ட கொடுமைகள் எல்லாம் நடக்க முடியும் என்பது பாண்டியனுக்கு நன்றாகத் தெரியும். இரண்டு வருஷங்களுக்கு முன் முத்துராமலிங்கம் என்ற இருபது வயதுப் பையனை அவன் பேரவைக் கூட்டுச் செயலாளருக்குப் போட்டியிட்டவனுக்காகத் தீவிரமாக வேலை செய்தான் என்பதற்காக இரவோடு இரவாக அவனுக்கு வேண்டிய யாரோ கூப்பிட்டு அனுப்புவதுபோல் அனுப்பி அடித்துக் கொன்று நீச்சல் குளத்தில் தூக்கிப் போட்டு விட்டார்கள். அப்புறம் துணை வேந்தர்,

போலீஸ், ஆர். டி. ஓ. எல்லாருமாகச் சேர்ந்து சதி செய்து 'வயிற்று வலி பொறுக்க முடியாமல் தண்ணீரில் குதித்து மாணவன் தற்கொலை' என்று உண்மையை மறைத்துப் பத்திரிகைகளில் வேறு விதமாகச் செய்தி வரச் செய்திருந்தார்கள். அதற்கு முந்திய வருஷம் பேரவைத் தேர்தலில் தலைவருக்குப் போட்டியிட்ட மாணவனையே கடத்திக் கொண்டு போய் எங்கோ வைத்து விட்டார்கள். அடர்ந்த காடுகளும், உயரமான மலைகளும் சூழ்ந்த மல்லிகைப்பந்தல் பல்கலைக் கழகத்தில் இப்படிக் குழப்பங்களைச் செய்கிறவர்களுக்கு இயற்கையான வசதிகளும் கூட இருக்கின்றன. எல்லாம் தெரிந்தும் பாண்டியன் அவசரப்பட்டு ஏமாந்து விட்டானே? இப்போது அவனை எங்கே என்று தேடுவது? எப்படிக் கண்டு பிடிப்பது?'' என்று வருத்தப்பட்டார் மணவாளன்.

அண்ணாச்சி பொன்னையாவை உடன் அழைத்துக்கொண்டு லேக்வியூ ஹோட்டலுக்குப் போய், அறைப் பையன்கள், ஸர்வர்கள், கிளீனர்கள் எல்லாரையும் ஒவ்வொருவராகக் காட்டி முந்திய நாள் பின்னிரவில் பாண்டியனைக் கூப்பிட்டுக்கொண்டுபோக விடுதி அறைக்குத் தேடி வந்த ஆளை அடையாளம் கண்டு பிடிக்க முடியுமா என்று பார்க்கச் சொன்னார். பயனில்லை. பாண்டியனைக் கூப்பிட்டுக் கொண்டு போக வந்த ஆள் மாதிரி அவர்களில் யாரையுமே காண முடியவில்லை. இந்தச் செய்தி அநாவசியமாக வெளியே பரவி விடாமல் காக்க முயன்றார்கள் அவர்கள்.

காலை பத்து மணி வரை பாண்டியனைப் பற்றி ஒரு தகவலும் தெரியாமலிருந்தது. பத்தரை மணிக்கு மோகன்தாஸும் இன்னும் இரண்டொரு மாணவர்களும் பொன்னையாவும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் புகார் கொடுத்து விட்டு வந்தார்கள். பிரதம தேர்தல் அதிகாரியான பேராசிரியர் பூதலிங்கத்துக்கும் இந்தச் செய்தி தெரிவிக்கப்பட்டது. அவர் இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு மிகவும் வருத்தப்பட்டார். பாண்டியனை எண்ணி மனம் நெகிழ்ந்தார். கண் கலங்கினார்.

''வாக்குரிமை, ஜனநாயகம் இவை எல்லாம் மன வலிமையும் சகிப்புத் தன்மையும் நிதானமும் உள்ளவர்களின் உயரிய சாதனங்கள். அவை இங்கே வெறும் உடல் வலிமையும், முரட்டுத்தனமும் உள்ளவர்களிடம் சிக்கிக் கொண்டிருக்கின்றன. இந்தச் சூழ்நிலையில் இந்த நாட்டில் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள்தான் நடக்க முடியும் போலும்'' என்று வேதனையோடு சொன்னார் பொருளாதாரப் பேராசிரியர்.

''போலீசாரை மட்டும் நம்பிச் சும்மா இருந்துவிடாதீர்கள். நீங்களும் ஓரளவு சிரமம் எடுத்துக் கொண்டாவது தேட வேண்டும்'' என்று மாணவர்களிடம் சொல்லியனுப்பினார் அவர். ''எங்களால் முடிந்தவரை முயன்று தேடிக் கொண்டு தான் இருக்கிறோம், சார்! விவரம் ஏதாவது தெரிந்தால் உடனே உங்களுக்குத் தெரிவிக்கிறோம். உங்களுக்கு ஏதாவது தெரிந்தாலும் சொல்லி யனுப்புங்கள்'' என்று மோகன்தாஸும் மற்றவர்களும் அவரிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டார்கள். அப்போது காலை பதினொன்றே கால் மணி. கடையைப் பார்த்துக் கொள்ளும்படி அண்ணாச்சி வேலைக்காரப் பையன்களிடம் சொல்லி விட்டுப் பொன்னையாவோடு வெளியே புறப்பட்டுப் போனார். லேக் வியூ ஹோட்டல் துணிகளை யெல்லாம் மொத்தமாகச் சலவை செய்பவர்கள் 'ஹில்டாப் டிரை கிளீனர்ஸ்தான்' என்று அறிய நேர்ந்தவுடன்,

''தம்பீ! ஹில்டாப் தங்கப்பன் அந்த அன்பரசன் வகையறா ஆளுங்களுக்கு ரொம்ப வேண்டியவன். வெளுக்கிறத்துக்கு வந்த லேக் வியூ ஹோட்டல் யூனிஃபார்மிலே ஒண்ணை எடுத்து எவனோ ஒருத்தனுக்கு மாட்டிவிட்டுப் பாண்டியனைக் கூட்டிக்கிட்டு வர்றத்துக்கு அதைப் பயன்படுத்தி யிருப்பாங்கன்னு நினைக்கிறேன். உங்களுக்கு என்ன தோணுது?'' என்று பொன்னையாவைக் கேட்டார் அண்ணாச்சி. அவரது அநுமானம் சாத்தியமா யிருக்கும் என்றே அவனுக்கும் தோன்றியது. எப்படியோ சாதுரியமாக நினைத்து அந்தச் சிக்கலின் ஒரு நுனியை அவர் கண்டுபிடித்து விட்டதை அவன் வியந்தான். மல்லிகைப்பந்தல் நகரிலிருந்து வெளியேறுகிற இரு பெரிய சாலைகளில் ஒன்று கிழக்கே மல்லிகைப்பந்தல் ரோடு, ரயில் நிலையம், மதுரை முதலிய சம நிலத்து ஊர்களுக்காகக் கீழே இறங்குவது. மற்றொன்று மேலே ஏலக்காய், தேயிலை, கோக்கோ எஸ்டேட்டுகள் அடங்கிய மேற்குத் தொடர் மலைகளில் மேற்செல்வது. இந்த இரண்டு சாலைகளிலுமே நகர எல்லைகளில் இருந்த பெட்ரோல் பங்குகள், காட்டிலாகா எக்ஸைஸ் இலாகா செக் போஸ்டுகள் எல்லாவற்றுக்கும் பொன்னையாவோடு போய்ச் சோம்பல்படாமல் தூண்டித் தூண்டிச் சில விவரங்களை விசாரித்தார் அண்ணாச்சி. மேற்கு மலைச் சாலையில் அதிகாலை நான்கு மணிக்கு அசுர வேகத்தில் வந்த ஒரு லாரியைப் பற்றியும்

சிம்லா ஒப்பந்தம் ஏற்பட்டதனால் ஒரு புதிய 'ரிக்கார்டு' உருவாயிற்று. ஆம், சமீபத்தில் சிம்லா ஒப்பந்தத்தின்போது சிம்லாவிலிருந்து மொத்தம் மூன்றரை லட்சம் வார்த்தைகள் பத்திரிகைக்காரர்களால் தந்தி மூலம் அனுப்பப்பட்டன. இது ஒரு உலக ரிக்கார்டாம். இவ்வளவு வார்த்தைகள் உலகில் வேறு எந்த ஒரு நிகழ்ச்சிக்காகவும் இதுவரையில் அனுப்பப்பட்டதில்லையாம்.

ஆதாரம்: 'கரண்ட்' - சம்பத்குமாரி

---

அதில் சில பல்கலைக் கழக மாணவர்களும் தென்பட்டதைப் பற்றியும் காட்டிலாகா செக் போஸ்ட் ஆள் அண்ணாச்சியிடம் விவரித்தபோது அவர் முகம் மலர்ந்தது. 'தென்மணி லாரி சர்வீஸ்' என்ற அந்த லாரியின் பெயரையும் அண்ணாச்சி இரண்டாவது தடவையாகக் கேட்டுக் கொண்டார். அதன் பின்பு, ''தம்பீ! வாங்க.... இனிமேல் எங்கே தேடணும்னு தெரிஞ்சு போச்சு'' என்று பொன்னையாவிடம் கூறிவிட்டு, அவனையும் அழைத்துக் கொண்டு லேக்வியூ ஹோட்டலுக்குத் திரும்பினார் அண்ணாச்சி. மணவாளனின் அறைக்குப் போய்ச் சேர்ந்ததும் அண்ணாச்சியும் பொன்னையாவும் வேறு ஒரு புதிய செய்தியை அங்கே அறிய நேரிட்டது. மணவாளனோடு அங்கே அறையில் இருந்த மோகன்தாஸ் அந்தப் புதிய செய்தியை இவர்களுக்குச் சொன்னான்:

''அண்ணாச்சி! காலையில் நானும் நண்பர்களும் பாண்டியன் காணாமல் போனதைப் பற்றிப் போலீஸ் ஸ்டேஷனில் புகார் செய்து விட்டு எங்களுடைய பிரதம தேர்தல் அதிகாரியாக நியமிக்கப் பட்டிருக்கும் பேராசிரியர் பூதலிங்கத்திடமும் போய் இதைத் தெரிவித்தோம். நாங்கள் அவரிடம் பேசிவிட்டு இங்கே வரும்போது பதினொன்றரை மணி. வந்து ஓர் அரை மணி நேரத்துக்கெல்லாம் மறுபடியும் பகல் பன்னிரண்டு மணி சுமாருக்கு எங்களை அவசரமாகக் கூப்பிட்டனுப்பினார் பேராசிரியர். நானும் நண்பர்களும் உடனே போய் அவரைச் சந்தித்தோம். இங்கேயே உள்ளூரில் தபாலில் போடப்பட்ட பாண்டியனின் கையெழுத்தோடு கூடிய இன்றைய தேதியிட்ட ஒரு கடிதத்தை அவர் எங்களிடம் காட்டினார். அதில் இடம், விலாசம், ஒன்றுமில்லை. 'மாணவர் பேரவைச் செயலாளர் பதவிக்குப் போட்டியிடுவதிலிருந்து சொந்தக் காரணங்களால் தான் விலகிக் கொள்வதாக' எழுதிக் கையெழுத்திட்டிருந்தான் பாண்டியன். யாரோ நிர்ப்பந்தித்துப் பலாத்காரமாக எழுதி வாங்கி அனுப்பிய கடிதம் போலிருந்தது அது. நாங்கள் சந்தேகப்பட்டது போலவே பேராசிரியரும் அந்தக் கடிதத்தைப் பற்றிச் சந்தேகப்படுகிறார். எதிரிகளின் அத்தனை மிரட்டலுக்கு நடுவிலும் தந்திரமாக ஒரு காரியம் செய்திருக்கிறான் பாண்டியன். அபேட்சை மனுவிலுள்ள கையெழுத்து எப்படி இருக்கிறதோ அப்படியே கையெழுத்திட்டிருந்தால்தான் விலகல் மனு செல்லுபடியாகும். அபேட்சை மனுவில் எஸ். சி. பாண்டியன் என்று டி.ஒய்.ஏ.என் என்னும் ஸ்பெல்லிங்கோடு கையெழுத்துப் போட்டிருந்தவன் இந்த விலகல் மனுக் கடிதத்தில் சி. பாண்டியன் என்று டி. ஐ. ஏ. என் என்னும் ஸ்பெல்லிங்குடன் கையெழுத்துப் போட்டு எதிரிகளின் சதியைச் சிதற அடித்திருக்கிறான். இந்தச் சாதுரியத்தினால் இன்றிரவுக்குள் அவனை வாபஸ் வாங்கச் செய்து வெற்றிச் செல்வனைப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்க நினைத்தவர்களது எண்ணத்தில் மண் விழுந்திருக்கிறது. ஆனாலும் 'நாளைக் காலை நோட்டீஸ் போர்டில் இறுதிப் பட்டியல் வெளிவருகிறவரை இது இரகசியமாகவே இருக்கட்டும். அவர்கள் நிர்ப்பந்தமாக ஏற்பாடு செய்து அனுப்பிய விலகல் மனுவில் பாண்டியன் இப்படி ஒரு சாதுரியம் புரிந்து தப்பிய விவரம் அவர்களுக்கே தெரிந்தால் அவனை மேலும் கொடுமைப்படுத்தக் கூடும். ஆகவே நாளைக் காலை பத்து மணிக்கு இறுதியான அபேட்சகர்கள் பட்டியல் வெளியாகிற வரை உங்களுக்குள்ள அவகாசத்தைப் பயன்படுத்தி எப்படியும் பாண்டியனைத் தேடி மீட்க முயலுங்கள். அவனை இப்படி நயவஞ்சகமாகக் கடத்திக்கொண்டு போனவர்கள் இப்படிக் கடத்திக் கொண்டு போய் எதைச் சாதிக்க முயன்றார்களோ, அது பலிக்கவில்லை என்பது அவர்களுக்கே தெரியும் போது கோபம் அதிகமாகும். அப்படிக் கோபம் அதிகமாகி அவர்கள் பாண்டியனைத் துன்புறுத்த முற்படுவதற்குள் அவனை அவர்களிடமிருந்து நீங்கள் மீட்டு விட வேண்டும். அதுவரை பாண்டியனின் விலகல் மனுவை நான் ஏற்றுக்கொண்டு விட்டேன் என்று பொய்யாக ஒரு செய்தி பரவினால்கூட அவனுக்கு அது பாதுகாப்பாயிருக்கும். தவிப்பட்ட முறையில் இதை நான் உங்களுக்குக் கூறுகிறேன். உடனே அவனை மீட்க முயலுங்கள்' என்று பேராசிரியர் எங்களிடம் சொல்லி அனுப்பினார். இப்போது இனிமேல் என்ன செய்யலாம் என்பதை நீங்கள்தான் சொல்ல வேண்டும் அண்ணாச்சி!'' என்றான் மோகன் தாஸ்.

''நமக்குத் தெரிந்த விவரங்களை எல்லாமே போலீஸாரிடம் கூறி அவர்கள் உதவியோடு பாண்டியனைத் தேடி மீட்க

# நவீனமான வெளித்தோற்றம்
## அதை மிகைப்படுத்துகிறது
## பல பயனுள்ள

**ஸில்விக்ரீட்**

ஏஸிஸி வெள்ளை சிமெண்ட்



கட்டிடங்களுக்கும், கூடார மண்டபங்களுக்கும் வெளிப்புறத்தில் அலங்காரத் தோற்றமளிக்கச் சிறந்தது ஸில்விக்ரீட். பற்பல விதமான சுவர் அலங்காரங்களுக்கும், அலங்கார முகப்புகளுக்கும், டைல் அல்லது டெர்ராஸோ தரைகளுக்கும், ஜாலிகளுக்கும், கொடிவீடுகளுக்கும் பயன்படுகிறது ஸில்விக்ரீட். அருகாமையிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்டின் கிளை அல்லது அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமிருந்து ஸில்விக்ரீட் சுலபமாகக் கிடைக்கிறது.

ஸ்னோஸெம் மற்றும் கலர்க்ரீட்டிற்கு ஆதாரப் பொருள் ஸில்விக்ரீட்.

**ஏஸிஸி** உயர்ந்த தரத்திற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிட்., • தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிட்.,

லாம்'' என்றான் ஒரு மாணவன். அது சாத்தியமில்லை என்பதை அண்ணாச்சி, மோகன் தாஸ், மணவாளன் மூவருமே உணர்ந்திருந்ததனால் அவர்கள் அதற்கு இணங்கவில்லை.

அவர்கள் இப்படிச் சிந்தித்துக் கொண்டிருந்தபோதே எப்படியோ தகவல் தெரிந்து கண்ணுக்கினியாளும், வேறு சில மாணவிகளும் அங்கே வந்துவிட்டார்கள். கண்ணுக்கினியாள் கூறினாள்:

''நான் வார்த்தைக்கு வார்த்தை படித்துப் படித்துச் சொல்லி எச்சரித்தேன் அண்ணாச்சி! அவர் கவனக் குறைவாக இருந்ததால் எல்லாமே கெட்டுப் போய்விட்டது.'' இதைச் சொல்லும் போது அவள் கண்களில் நீர் நெகிழ்ந்து விட்டது.

''ஒன்றும் கெடவில்லை தங்கச்சி! மணவாளன் கூப்பிடுகிறார்னு பொய் சொல்லித் தூக்கக் கலக்கத்திலே தம்பியை ஏமாத்திட்டாங்க... மணவாளன் மேலிருந்த பிரியத்திலே தம்பி ஏமாந்திடுச்சு. கவலைப்படாமே நீயும் மற்றத் தங்கச்சிகளும் திரும்பிப் போங்க. நாளைப் பொழுது விடியறப்போ தம்பி நம் மோட காப்பி குடிக்க இங்கே இருக்கும். அதுக்கு நாணச்சு'' என்று அண்ணாச்சி உறுதி கூறி அவளையும் மற்ற மாணவிகளையும் திருப்பி அனுப்பினார். அப்புறம் உள்ளூரின் பிரபல வியாபாரிகளில் தேசப்பற்று நிறைந்த ஒருவருக்கு ஃபோன் பண்ணி ஒரு லாரியை வரவழைத்தார். லாரியில் சிலம்பக் கழிகள் பத்துப் பன்னிரண்டு, டார்ச் லைட்டுகள் நாலைந்து எல்லாம் வைக்கப்பட்டன.

அன்று மாலை ஆறு மணி சுமாருக்கு அண்ணாச்சியும், மோகன்தாஸ், மணவாளன், பொன்னையா முதலிய மாணவர்களும் அந்த லாரியில் மலைப் பகுதிக்குப் புறப்பட்டார்கள். நகர எல்லை கடந்ததும் லாரி டிரைவர் 'எங்கே போக வேண்டும்?' என்று கேட்டான்.

''ப்ளூஹில் கார்டமம் எஸ்டேட்டுக்குப் போ! மெயின் ரோடிலிருந்து எஸ்டேட்டுக்குப் பிரிகிற மலை வழிக்குப் பக்கமாகப் போனதும் மறுபடியும் என்னைக் கேள்'' என்று வழி சொன்னார் அண்ணாச்சி.

நகர் எல்லைக்குப் போவதற்குள்ளேயே நன்றாக இருட்டி விட்டது. இப்போதோ இன்னும் சில விநாடிகளிலோ மழை வந்துவிடும்போல் மேகங்கள் வானை மூடிக் கருமை குவித்திருந்தன. சாலையின் இருபுறமும் அடர்ந்த காட்டின் பசுமையும் ஈர மணமும் சுகமாயிருந்தன. சிறிது தொலைவு போவதற்குள்ளேயே மழை கொட்டத் தொடங்கி விட்டது. டிரைவர் ஸீட் அருகே அமர்ந்திருந்த இருவரைத் தவிர மற்ற மாணவர்கள் நனைய நேரிட்டது. நடுவே சாலையில் ஓரிடத்தில் இவர்கள் போய்க் கொண்டிருந்த திசைக்கு எதிர்த் திசையிலிருந்து 'தென்மணி லாரி சர்வீஸ்'— லாரி ஒன்று விரைந்து வந்தது. மேலே ஏறும் வண்டிகளுக்கு முதலில் வழி விலகி இடம் விட வேண்டும் என்ற முறையையும் மீறி நிற்காமல் விரைந்து சென்றது அந்தத் தென்மணி லாரி. அதில் யார் இருக்கிறார்கள் என்பதை அந்த மழையில் அண்ணாச்சியினால் கவனிக்க முடியவில்லை. மேலும் பதினைந்து நிமிஷங்களுக்குப் பின், ''எஸ்டேட்டுக்குப் பிரிகிற வழி வந்தாச்சுங்க. இங்கேயே நிறுத்திக்கிடட்டுமா?'' என்றான் லாரி டிரைவர். அண்ணாச்சி, லாரியை அங்கேயே நிறுத்தச் சொல்லிவிட்டுத் தான் மட்டும் ஒரு கிளுவைக் கம்பு, டார்ச் லைட் சகிதம் கீழே இறங்கினார்.

''தம்பிங்களா! முதல்லேயே எல்லாரும் திமு திமுன்னு உள்ளே நுழைய வேணும். நான் போய் நோட்டம் பார்க்கிறேன். இங்கே நம்ப வகைப் பையன் ஒருத்தன் வாட்ச்மேனாக இருக்கான். அவனைக் கேட்டால் தெரிந்து விடும். என் ஊகப்படி இந்த ஏலக்காய் எஸ்டேட்டு எல்லைக்குள்ளேதான் எங்காவது பாண்டியன் இருக்கணும். உங்க உதவி தேவைப்பட்டால் அதோ அந்த மேட்டிலிருந்து டார்ச் லைட்டை மூன்று தடவை ஏற்றி அணைத்துக் காண்பிக்கிறேன். அப்புறம் நீங்கள் வரலாம். அதுவரை லாரியிலேயே இருந்தால் போதும்'' என்று அவர்களிடம் கூறி விட்டு அந்த மழையில் நனைந்து கொண்டே பசுமை மின்னும் ஏலக்காய்ச் செடிகளின் இடையே புகுந்து மறைந்தார் அண்ணாச்சி.

சிறிது நேரத்தில் மழை முன்னிலும் அதிகமாகியது. மலைச் சாலையின் இருபுறமும் தண்ணீர் வாய்க்காலாகப் பெருக்கெடுத்துப் பாய்ந்து கொண்டிருந்தது. மின்னல்கள் வானைக் கிழித்துச் சொடுக்கின. மின்னல் மின்னி மறையும்போது ஏலக்காய்ச் செடி மடல்கள் மரகத வார்ப்புகளாகப் பளபளத்தன. லாரியில் மீதமிருந்த கிளுவைக் கம்புகளை ஆளுக்கொன்றாக எடுத்து வைத்துக் கொண்டு மேட்டிலிருந்து அண்ணாச்சியின் சமிக்ஞையை எதிர்பார்த்து லாரியில் காத்திருந்தார்கள் மாணவர்கள். அரை மணி நேரத்துக்குப் பின் அவர்கள் எதிர்பார்த்த சமிக்ஞை கிடைத்தது. மேட்டில் டார்ச் லைட் மும்முறை மின்னி மின்னி மறைந்தது. உடனே அவர்களும் மேட்டை நோக்கி விரைந்தார்கள். (தொடரும்)





## சுதந்திரச் சிற்பிகள்

நமக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்த பெருந் தலைவர்கள் எல்லோரையும் இவ் வெள்ளி விழா ஆண்டில் நினைவுபடுத்திக் கொண்டு அஞ்சலி செலுத்துவோம். சுதந்திரப் போராட்ட காலத்திய சில முக்கிய நிகழ்ச்சிகளை இங்கு படங்களாகக் காணலாம்.

1. 1931 வட்டமேஜை மகாநாட்டுக்குக் காந்திஜி கிளம்புவதற்கு முன். அருகில் மாளவியா, சரோஜினி நாயுடு, கஸ்தூரி பா.

2. 'வெள்ளையனே வெளியேறு' என்ற சரித்திரப் பிரசித்தி பெற்ற கோஷம் 1942ல் உருவானபோது அண்ணல் காந்தியடிகளும் நேருஜியும் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்கின்றனர்.

3. 1938 ஹரிபுரா காங்கிரஸில் மகாத்மா வோடு சுபாஷ் சந்திர போஸ்.

4. 1930க்குப் பிறகு உலகம் முழுவதன் கவனத்தை ஈர்த்தது இந்தக் குடிசை. காந்திஜி தங்கியிருந்த சேவாகிராம் ஆசிரமம்.

5. அன்னி பெஸன்ட், வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார், ஸ்ரீ சத்தியமூர்த்தி ஆகியோருடன் காந்திஜி.

6. அண்ணலின் உண்ணாவிரதங்கள் லட்சோப லட்சம் மக்களின் மனங்களைத் தாக்மைப்படுத்தின. 1924ம் ஆண்டில் இருபத்தொரு நாள் உண்ணாவிரதமிருந்தபோது சிறுமி இந்திரா காந்தி தாத்தாவிடம் புன்னகையைத் தோற்றுவித்தாள்.





















4. பர்தோலி சத்தியாக்கிரகத்தில் 'சர்தார்' ஆகி, பின்னால் ஐக்கிய பாரதத்தை நிலையாக்கிய இரும்பு மனிதர் படேல் மகாத்மாவுடன்.

5. கிரிப்ஸ் தூது. 1942 மார்ச் 27-ந் தேதி மகாத்மாவோடு சரித்திரப் பிரசித்தி பெற்ற சந்திப்பு.

6. கனல் தெறிக்கும் பாடல்களால் தமிழகத்தைத் தட்டி எழுப்பிய அமர கவி பாரதியார்.

1. சூரத் காங்கிரஸுக்குப் பிறகு பம்பாயில் திலகர் சுதந்திர முழக்கம் செய்கிறார். அவருக்கு அருகிலே அரவிந்த கோஷ் அமர்ந்திருக்கிறார்.

2. 1921ம் ஆண்டு. அகமதாபாத் இந்திய தேசிய காங்கிரஸ் கூட்டத்தில் கொடி வணக்கத்தின்போது காந்தி மகான்.

3. அரசியல் தலைவர் காந்திஜியை நமக்கு தேசிய கீதம் வழங்கிய கவி ரவீந்திரநாத் டாகூர் சாந்திநிகேதனத்தில் வரவேற்கிறார்.

7. வடக்கே தண்டி யாத்திரை, தெற்கே வேதாரண்யம் உப்பு சத்தியாக்கிரகம். போராட்ட வீரர்களுடன் தலைவர் ராஜாஜி.

8. பிரிவினை கோரி பிடிவாதமாய் பாகிஸ்தான் ஸ்தாபித்த ஜின்னா மவுண்ட்பாட்டன் தம்பதியோடு.





# மாதம் ஒன்று, இரண்டு, மூன்று
# மெல்ல கவிழ்ந்து படுக்கும் நன்று



மூன்றுவது மாதத்திலிருந்து உங்கள் குழந்தைக்குப் பால் மட்டும் போதாது. சீரான உடல் வளர்ச்சிக்கு உங்கள் குழந்தைக்குத் தேவை பாரெக்ஸ்...அதன் முதலாவது திட உணவு. குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கு ஏற்ற சரியான புரதச் சத்து கொண்டது பாரெக்ஸ்.

குழந்தைக்கு எத்தனை சீக்கிரம் திட உணவு கொடுக்க ஆரம்பிக்கிறீர்களோ அத்தனை நல்லது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். குழந்தையின் சீரான வளர்ச்சிக்கு வேண்டிய சரியான புரதச் சத்துடன், கார்போ ஹைட்ரேட்டுகள், கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் மற்றும் தாது உப்புகள் யாவும் அடங்கியது பாரெக்ஸ். பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலையை இணைத்து, டிபார்ட்மெண்ட் K-1-P த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ பி. என்னும் முகவரிக்கு எழுதுக. (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).




**சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.**

**பாரெக்ஸ்®** - க்ளாக்ஸோ தயாரிப்பு

CHCR-208-202-Tam



# தலைக்கோணாரநஞ்

கி.ராஜேந்திரன்

## 28. வெள்ளி அருவி



வன தேவதைகள் அம் மலைக்குப் பின்னால் இருந்து கொண்டு வெள்ளித் துகள்களைச் சொரிகிறார்களோ என்று அந்த அருவி கொட்டு வதைப் பார்த்தபோது எண்ணத் தோன்றி யது. 'ஸில்வர் காஸ்கேட்' என்ற பெயர் ரொம்பப் பொருத்தம்தான். இயற்கை தன் எழிலையெல்லாம் காட்டிச் சிரிக்கும் அந்தச் சூழலின் அருகே சில ஆளுயர மண் பொம்மை களையும் செயற்கையாக ஒரு பொங்குபுனலை யும் வைத்து அசிங்கப்படுத்தி யிருந்தார்கள். உல்லாசப் பயணிகளுக்குச் சிற்சில சௌகரி யங்களைச் செய்து கொடுப்பது நல்லதுதான். ஆனால் குபேர பட்டணத்தில் குடிசை எதற்கு? நீண்டு தழைத்து வளர்ந்துள்ள மயில் தோகைக்கு ரிப்பன் வைத்துக் கட்டி அழகு படுத்தவா வேண்டும்?

இந்த இடத்துக்குப் பிக்னிக் வந்திருந்த பத்மநாபன்–நடராஜன் குடும்பங்கள் ரொம்ப உற்சாகமாக இருந்தன. ஒரு கொலையைப் பற்றிய சிக்கலைத் தீர்த்து விட்டதில் நடராஜ னுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி மற்றவர்களையும் தொத்திக் கொண்டிருந்தது. அவர்கள் நண்பன் அமிர்தலிங்கம் மட்டும் எதையோ பறிகொடுத்து விட்டாற்போல் முகத்தை வைத்துக் கொண்டிருந்தான். ஹாப்பி ஹாலிடேயிலிருந்து அந்த ஹோட்டல் பஸ்ஸி லேயே வந்திருந்த வேறு சிலரும் ஆங்காங்கே அருவியிலிருந்து சற்றுத் தொலைவிலும் அல்லது அதற்கு மிக அருகிலும் தனித்தனிக் குழுவாக அமர்ந்து அன்வளாவியபடியே தாங்கள் கொண்டு வந்திருந்த சிற்றுண்டியை ஒரு கை பார்த்துக்கொண்டிருந்தனர்.

மலைச் சாரலில் நெடிதுயர்ந்து வளர்ந்தி ருந்த யூகலிப்டஸ் மரம் ஒன்றைச் சுட்டிக் காட் டினார் நடராஜன். ''மீனா! உன்னால் ஊகிக்க முடியுமா, அதற்கு எத்தனை வயசு என்று?''

''அதன் பருமனையும் உயரத்தையும் பார்த் தால் நூறு. ஏன் இருநூறு வருஷங்கள்கூட இருக்கலாம் என்று தோன்றுகிறது'' என் றாள் மீனா.

''நூறு இருநூறு வயதான மரங்கள் உண்டு; ஆனால் இங்குள்ள யூகலிப்டஸ்களுக்கு அத்தனை வயதாகவில்லை மீனா. திரும்பிய பக்கமெல்லாம் யூகலிப் டஸ் மரங்கள் இருப்பதைப் பார்த்து நீ அவை இந்த மண் ணுக்கே சொந்தமானவை என்று நினைத்து விட்டாய்போ லிருக்கி றது. உண்மையில் யூகலிப்டஸ் மரங்கள் இங்கு அயல்நாட்டி லிருந்து கொண்டு வரப்பட்டவை தாம். நூறு வருஷங்களுக்கு முன் னால் தான் இந்த மண்ணுக்கு அறி முகமாயின. அதனால் இங்கே உள்ள மிக மிக வயதான மரங் களுக்கே நூறு வயசுக்கு மேல் இராது! ஆனாலும் இப்போதுதான் அவை வாலிபப் பருவத்தை எட் டிக் கொண்டிருப்பதாகக் கருத லாம். ஆஸ்திரேலியாவில் முந் நூறு நானூறு அடி உயரம் வரை வளருமாம்! இங்கே அத்தனை



உயரம் வளர முடியாததற்குக் காரணம் வேர் கீழே ஊடுருவிப் போக மண் ஆழம் போதவில்லை; பாறை தடுக்கிறது.''

''அப்பா ! இன்னொரு விநோதத்தையும் சொல்லுங்கள், அதன் இலைகளைப் பற்றி'' என்று நினைவூட்டினான் ரங்கநாதன்.

''வெந்நீரில் சற்று நேரம் போட்டு வைத்திருந்து குளித்தால் சுற்றி அலைந்த அலுப்பெல்லாம் ஓடிப் போய்விடுகிறது'' என்றாள் அம்புஜம். ''அதைத்தானே சொல்கிறாய் ரங்கா ?''

'' இவன் குறிப்பிடுவது அதை இல்லை. 'யூகலிப்டஸ் மரங்களின் இலைகள் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?' என்று கேட்கிறான். ஆஸ்திரேலியாவிலிருந்து இங்கே வந்த பிற்பாடு இந்த சீதோஷ்ண நிலைக்கு ஏற்ப இலைகளின் உருவமே மாறி விட்டிருக்கிறது! அதனால் இரண்டுவிதமான இலைகளுடன் யூகலிப்டஸ் மரங்களை இங்கே காணலாம் !''

''ப்ளம் செடிகூட மேனாடுகளிலிருந்து தருவிக்கப்பட்டு இங்கே பயிரானதுதானே?'' என்று கேட்டார் பத்மநாபன்.

''ஆமாம், இந்தச் சீதோஷ்ண நிலை ஏறத்தாழ மேனாட்டுக் குளிர்ப் பிரதேசங்களுக்கு ஒத்ததாக இருப்பதால் அங்கிருந்து பலவிதமான பழமரங்களையும் மலர்ச் செடிகளையும் கொண்டு வந்து நட்டிருக்கிறான் வெள்ளைக்காரன்.''

'' நீங்க சொல்லலைன்னா நான் நம்பியே இருக்க மாட்டேன்'' என்றாள் அம்புஜம். ''உயரம் உயரமா விண்ணை



முட்டற மாதிரி வளர்ந்திருக்கிற இந்த மரங்கள் நம் நாட்டைச் சேர்ந்தவையில்லை என்றால் எப்படி நம்புவது? காலம் காலமா இங்கே இருந்தவைன்னு தான் தோணும்.''

''தோற்றத்தாலே ஏற்படுகிற மயக்கம்அது. இமயமலையை எடுத்துக்கிடுங்க; உலகத்திலேயே பெரிய மலைச் சிகரங்கள் அங்கேதான் இருக்கு. ஆனால் நான் சொல்றேன், இமயமலை கொடைக்கானல் மலைக்குத் தம்பிதான்; அண்ணன் இல்லை!''

''நிஜமாகவா!'' என்று முகவாயில் கை வைத்துக் கேட்டாள் அம்புஜம்.

''ஆமாம்! இமய மலையில் அகப்படும் பாறைகளை விடக் கொடைக்கானல் மலையில் கிடைக்கும் பாறைகள் பழைமையானவை என்று விஞ்ஞானிகள் நிரூபிக்கிறாங்க!''

''ஆச்சரியமாயிருக்கே! கொலை பண்ணினது யாருன்னு நீங்க நிரூபிச்சது தான் பெரிய ஆச்சரியம்னு நினைச்சேன். இந்த மலையைப் பற்றி நீங்க சொல்றது அதையும் தூக்கி அடிக்கிறதா இருக்கு.''

''நான் எதையும் பிரமாதமா சாதிச்சுடலீங்க. சந்தர்ப்ப வசத்தால் இந்தக் கேஸ் சுலபமா முடிஞ்சு போச்சு; அவ்வளவுதான். அந்த நகைக் கடைக்காரர், தெருக் கூட்டற ஆறுமுகத்துக்கு நூறோ, இருநூறோ கொடுத்துட்டு இரண்டாயிரம் ரூபாய் பெறுமானம் உள்ள புருச்சை அமுக்கியிருக்கலாம். ஆனால் அவர் நாணயஸ்தனாக இருந்தார்.

புருஷ்சைக் கொண்டு வந்து போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைச்சுட்டார். அப்படி அவர் செய்திருக்கலேன்னு நான் என்னத்தைக் கண்டுபிடிச்சிருக்க முடியும்?''

'' என்ன நடந்தது? விவரமாகத் தான் சொல்லுங்களேன்'' என்றாள் மீனா கதை கேட்கும் ஆர்வத்துடன்.

''ரங்கா! குழந்தைகள் பேரில் ஒரு கண் இருக்கட்டும். நான்பாட்டுக்கு வாயைத் திறந்துண்டு கதை கேட்டுண்டிருப்பேன். இதுகள்பாட்டுக்குப் போகக் கூடாத இடத்துக்குப் போய் வைக்கும்'' என்று முன்னெச்சரிக்கையாகச் சொல்லி விட்டு அம்புஜம் காதைத் நீட்டிக் கொண்டாள், நடராஜன் கூறுவதைக் கேட்க. பத்மநாபனும் சற்று நெருங்கி உட்கார்ந்தார்.

*　　*　　*

**ஹா**ப்பி ஹாலிடேயிலிருந்து கிளம்பி டி. ஐ. ஜி. (ஸி. ஐ. டி.) நடராஜன் டவுனில் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தபோது இரவு மணி எட்டரைக்கு மேல் இருக்கும். பிரேதப் பரிசோதனை முடிந்து டாக்டர் 'ரிப்போர்ட்' எழுதிக் கொண்டிருந்தார். அந்த ஆசாமி நீரில் மூழ்கிச் சாகவில்லை என்றும், யாரோ அவனை மண்டையில் பலமாக அடித்திருக்கிறார்கள் என்றும் குத்துக் காயமும் இலேசாகப் பட்டிருப்பதாகவும் சொன்னார். அதன்பின் உடல் உருட்டித் தள்ளப்பட்டிருக்க வேண்டும். அப்படிப் புரட்டித் தள்ளுமுன்பாகவே உயிர் பிரிந்திருக்கலாம்; அல்லது அடி வாங்கியபோது மயங்கி விழுந்தவன் ஏரியில் தலையிலிருந்து இடுப்பு வரையில் மூழ்குமாறு தள்ளப்பட்ட பிறகு செத்துப் போயிருக்கலாம். எப்படியானாலும் இது விபத்து இல்லை; கொலைதான்.

அவர் கூற்றுக்கு வலுவளிப்பதுபோல் இன்ஸ்பெக்டர், அவ்விடத்திலேயே கரையோரமாகப் புல் தரையில் கண்டெடுக்கப்பட்ட கூரிய ஆயுதத்தைக் காட்டினார் டி. ஐ. ஜி.க்கு. படகைக் கரையோரமாகக் கொக்கி மாட்டினாற்போல் இழுத்துக் கொள்ளவும், கரையைவிட்டு அப்பால் தள்ளிக் கொள்ளவும் பயன் படும் ஆயுதம் அது. சுமார் நாலடி நீளமுள்ள கழியின் முனையில் கூர்மையான கொக்கி பொருத்தப்பட்டிருந்தது. இரத்தக் கறையும் தெரிந்தது.

இறந்து போனவரின் பர்ஸில் 'விஸிட்டிங் கார்ட்' இருந்ததானது இன்னாரென்று அடையாளம் கண்டு கொள்ள உதவியது. அந்த விலாசத்தில் உறவினருக்குத் தகவல் தெரிவிக்கச் சொல்லிவிட்டுப் போட் கிளப்பைச் சேர்ந்த சிலரை விசாரித்தார் நடராஜன். அங்கு பணம் வசூல் செய்யும் நபர்' பரமசிவத்தோடு ஒரு நண்பரும் படகில் ஏறிக் கொண்டது நினைவிருப்பதாகச் சொன்னான். அந்த நண்பர் கரையிலிருந்த என். ஸி. ஸி. பெண் ஒருத்தியுடன் வம்பு வளர்த்ததாயும் அவளைப் படகில் ஏற்றிக் கொண்டதாயும் படகோட்டி ஒருவன் கூறினான். அந்தப் பக்கமாக வேறொரு குடும்பத்துக்காகத் தன் படகைச் செலுத்திக் கொண்டு வந்தபோது இதைப் பார்த்ததாகவும், உரிய பணம் கட்டாமல் இடையில் ஒருவரைப் படகில் ஏற்றிக் கொள்வது தவறு என்று தான் சுட்டிக் காட்டியதாகவும், ஆனால் அவர்கள் தன் பேச்சை அலட்சியம் செய்ததாகவும் சொன்னான்.

போட் கிளப்பைச் சேர்ந்த இவ்விருவரும் கொடுத்த வாக்குமூலத்தின் அடிப்படையில் இன்ஸ்பெக்டர், கொடைக்கானலில் உள்ள பல லாட்ஜுகளுக்கும் என். ஸி. ஸி. காம்ப்புக்கும் போய் விசாரித்துக் கொண்டு வரப் போலீஸ்காரர்களை அனுப்பினார். பரமசிவம் என்பவரோடு சேர்ந்து வந்து அவருடன் ஒரே அறையில் தங்கியுள்ள நண்பரை ஹெவன்லி லாட்ஜில் கண்டு பிடிப்பது அவர்களுக்குக் கஷ்டமாக இருக்கவில்லை. அதேபோல் என்.ஸி.ஸி. காம்பில் விசாரித்தபோது போட் கிளப்புக்குப் போய் டிக்கெட் எடுக்காமல் வேறோரிடத்தில் படகேறி உல்லாசப் பவனி வந்த பெண்ணைப் பற்றித் தெரிந்து கொள்வதும் போலீஸாருக்கு எளிதாகவே இருந்தது. சந்திராவையும் குருசாமியையும் அழைத்துக் கொண்டு வந்துவிட்டார்கள். இருவரையும் தனித் தனியே விசாரித்தார் நடராஜன்.

''பணம் செலுத்தாமல் படகு ஏறியதற்காக என்னைக் கண்டிக்கப் போறீங்கன்னு நினைச்சுக்கிட்டு வந்தேன். மர்டர் கேஸுன்னு இங்கே வந்தப்புறம் தான் புரியுது'' என்று கூறிக் கண் கலங்கினாள் சந்திரா. பரமசிவத்தைத் தான் கிண்டல் செய்தது வாஸ்தவம் என்று ஒப்புக் கொண்டாள். ''குருசாமியின் போக்கும் தோழிகளின் தூண்டுதலும் அதற்கு அநுசரணையாக இருந்தன. ஆனால் மனப்பூர்வமாக அவருக்கு நான் ஒரு தீங்கும் நினைக்கவில்லை'' என்று கூறி அவள் அழுதாள். ''இருட்டிக் கொண்டு வருகிற சமயத்தில், 'நேரமாகிவிட்டதே, இப்படியே கரையோரமா என்னை இறக்கிவிட்டுடுங்க'ன்னு கேட்டுக்கிட்டேன். தரையில் கால் பாவியதும் காம்ப்பை நோக்கி

## உங்கள் குடும்பத்திற்கு ஏற்றது மிகச்சிறந்ததே!




DC.G.49 TH

# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் விந்தையிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி—கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

# வயிற்றுக் கோளாறு?

வாயுவா?
அமில உபாதையா?
நெஞ்செரிச்சலா?
அஜீரணமா?






**2 ரென்னி மாத்திரைகளை மெல்லுங்கள்... விரைவிலேயே நிவாரணம் பெற**




நிக்கோலஸ் (N) தயாரிப்பு

mcm/ni/4 tam

ஓட்டமும் நடையுமாகப் போனேன். பரமசிவத்திடம் தமாஷா பேசினதுக்கு மன்னிப்பாவது கேட்டிருக்கலாம். அவசரத்தில் அதுவும் தோணலே. இப்போ அவர் செத்தே போயிட்டார்; என்னை எப்படி மன்னிப்பார்?'' — இவ்வாறு கேட்டுவிட்டுச் சந்திரா தொடர்ந்து விசும்பிக் கண்ணீர் உகுத்தாள்.

குருசாமி சந்திரா கூறிய நிகழ்ச்சிகளையேதான் திரும்பவும் விவரித்தான். '' சந்திரா போன பிறகு, 'நாமும் படகை இங்கேயே விட்டுட்டு லாட்ஜுக்கு நடந்து போயிடலாம்' என்றேன். பரமசிவம், 'நான் அப்புறம் வருகிறேன், நீ போ' என்று சொல்லி என்னை அனுப்பி விட்டுப் பெஞ்சில் உட்கார்ந்துகொண்டார். இப்படிக் கொலை நடக்கும்னு தெரிஞ்சிருந்தால் நான் அவரை விட்டுப் பிரிந்து போயே இருக்க மாட்டேன்'' என்றான்.

''அவர் பரமசிவம், நீங்க குருசாமி. பரமகுரு என்டர்பிரைஸஸ் என்று இவரோட விசிட்டிங் கார்டிலே போட்டிருக்கே, நீங்க ரெண்டு பேரும் வியாபாரத்தில் கூட்டாளிங்களா?'' என்று நடராஜன் கேட்டார்.

''ஆமாம்.''

'' உங்களுக்கிடையில் ஏதாவது தகராறு உண்டா ?''

''அப்படி ஒண்ணும் இல்லையே !''

''பொய் சொல்லாதீங்க! பரமசிவம் தமது பாக்கெட் டைரியில் எல்லாம் எழுதி வைச்சிருக்கார்'' என்று மேஜையின் மீது கிடந்த ஒரு டைரியைச் சுட்டிக் காட்டினார் நடராஜன்.

உண்மையில் அந்த டைரியிலிருந்து அவருக்கு எந்தவிதமான உபயோகம் மிக்க தகவலும் கிடைக்கவில்லை. பரமசிவம் எழுதியிருந்த சிலச் சில வரிகளும் தண்ணீர் பட்டுக் கலங்கித் தெளிவற்றிருந்தன. ஆயினும் 'பார்ட்னர் ஷிப் கன்ஸர்ன்' என்று வந்துவிட்டால் வெளிக்குக் காட்டிக் கொள்ளாது போனாலும் உள்ளூற பாகஸ்தர்களுக்கிடையே ஏதாவது மனஸ்தாபம் இருக்கத்தான் செய்யும் என்பது மனங்களைப் படித்தறிந்த நடராஜனுக்குத் தெரியுமாதலால் ஊகமாக மிரட்டிக் கேட்டார். மேலும் பர்ஸ் பறி போகாததிலிருந்து அது திருட்டுக்காக நடந்த கொலையல்ல; பகைமை பாராட்டி நடந்த கொலை என்று தெளிவாகியிருந்தது. அல்லது ஸைக்கோ ஸாரநாதன் செய்த வேலையாக இருக்க வேண்டும். ஊர் மக்களின் தீர்ப்பை ஒதுக்கி வைத்துவிட்டுப் பகைமை பாராட்ட யாருக்கு என்ன காரணம் இருக்கக்கூடும் என்று ஆராயப் புகுந்தார் நடராஜன்.

டைரியில் விவரம் எழுதப்பட்டிருக்கிறது என்றதும் குருசாமி பயந்துவிட்டான். அதன் அடிப்படையில் கம்பெனியின் பேரேடுகளைப் பறிமுதல் செய்து புரட்டிப் பார்க்க டி. ஐ.ஜி.க்கு எத்தனை காலம் ஆகும்? ஓர் ஆடிட்டரை அனுப்பி அலசச் சொன்னாலும் ஆயிற்று. ஆகவே தான் அநாவசியச் செலவு செய்வதாகப் பரமசிவம் குறைப் பட்டுக் கொள்வது உண்டு என்று ஒப்புக் கொண்டான் அவன்.

'' அநாவசியச் செலவு என்றால்? எதற்கு? எப்படி ?''

''அடிக்கடி பார்ட்டி கொடுக்கிறேன் என்பார்.''

''வெட்டா? ட்ரையா?''

''வெட்தான்.''

''இப்போ போலீஸ்காரங்க உங்களை வந்து கூப்பிட்டப்போ கூட நீங்க லாட்ஜிலே.....''

''விஸ்கிதான் சாப்பிட்டுக்கிட்டிருந்தேன். இன்னும் கேட்டா விஸ்கியைத் தாராளமா ஊத்திக்கிட்டேன்; அப்புறம் பெரிய டிரிங்க்கா அடிக்கக் கூடாதுன்னு மனசு கிடந்து தவிக்கவே சோடாவைக் குறைச்சுட்டேன்!''

''ஏனய்யா உங்க பார்ட்னர் செத்துக்கிடக்கான்; நீங்க ஜோக் அடிக்கிறீங்களா? வெட்கமாயில்லே?''

''நான் தமாஷ் பண்ணலே. குடிக்கிறது தப்புங்கிறது மாதிரி நீங்க பேசினீங்க. எனக்கு ரோஷம் வந்து பதில் சொன்னேன்.''

''குடிக்கிறது குற்றமில்லே. ஆனால் கொலை செய்யறது குற்றம்தான். கொலை விலக்கு இன்னும் ரத்தாகலே !''

''ஐயோ ஸார்! அபாண்டமாக என் மேலே பழி சுமத்தாதீங்க'' என்றான் குருசாமி.

''அபாண்டம் என்னய்யா இதில் ? கம்பெனிப் பணத்தை நீங்க கையாடியிருக்கீங்க. எக்கச்சக்கமாச் செலவு பண்ணியிருக்கீங்க. பெரியவருக்குப் பிடிக்கலே; கண்டிச்சு இருக்கார். உங்களுக்கு எரிச்சல். உணர்ச்சி வசப்பட்டு அவரை அடிச்சுக் கொன்னுட்டீங்க. அப்போ இருட்டு. அக்கம் பக்கம் யாருமில்லே. அதனாலே வேறே யார் பேரிலாவது சந்தேகம் ஏற்படட்டுமேன்னு நினைச்சு லாட்ஜுக்குத் திரும்பிட்டீங்க.. நடந்ததை மறக்க விஸ்கி பாட்டிலைத் திறந்துட்டீங்க.''

''இடையிலே கிடையாது ஸார்! நான் சொன்னதுதான் நிஜம். 'நான் கொஞ்ச நேரம் இருந்துட்டு வரேன் நீ போ'ன்னு சொல்லி அவர் என்னை அனுப்பிச்சுட்டார். அப்புறம் என்ன நடந்துச்சோ எனக்கொண்ணும் தெரியாது.''

''அதுக்கென்ன, ஃபிங்கர் பிரிண்ட் பரிசோதனைக்கு இந்த ஆயுதத்தை அனுப்பி வைச்சால் உண்மை புரிஞ்சு போகுது'' என்றார் நடராஜன்.

பாவனையில் அவர் அலட்சியமாய் இருந்தாரே ஒழிய அவர் மனத்துக்குத் தெரியும் விரல் ரேகை அடையாளத்தால் ஒன்றையும் நிரூபிக்க முடியாது என்று. ஏனெனில் படகு செலுத்தும் போதே அந்த ஆயுதத்தைக் குருசாமி பலமுறை கையாண்டிருப்பான். ஆகவே இவன் விரல் ரேகை பதிந்திருப்பதால் இவன்தான் கொலை செய்தான் என்று உறுதியாகக் கூற முடியாது. வேறு யார் விரல் ரேகை அடையாளமாவது இருக்கிறதா என்று பார்க்கலாம். ஆனால் சமீப காலமாகப் போட் கிளப்புக்கு வந்துள்ள ஆயிரக் கணக்கானவர்களில் எத்தனை நூறு பேர் அந்த ஆயுதத்தைப் பயன்படுத்தினார்களோ? பரமசிவத்தை மண்டையில் அடித்துக் கொலை செய்தவன் கெட்டிக்காரனாக இருந்தால் அந்த ஆயுதத்தின் பிடியைத் துடைத்து விட்டுக் கூடப் போயிருப்பான், விரல் ரேகை அடையாளம் ஏதும் அகப்படாதபடி. துப்பறியும் நாவல்களில்தான் இதையெல்லாம் கற்றுத் தந்து விடுகிறார்களே?

குருசாமி பரமசிவத்தைக் கொல்லக் காரணம் — மோடிவ் — இருக்கிறது. ஆனால் அவன்தான் கொலை செய்தான் என்று நிரூபிக்கச் சாட்சியங்கள் இல்லை. கெட்டிக்கார வக்கீல் ஒருவன் ஐந்தே நிமிஷங்களில் போலீஸ் கேஸைத் தவிடு பொடியாக்கி விட்டுக் குருசாமியை விடுவித்து அழைத்துப் போய்விடுவான். ஆயினும் ஊர் வாயை அடைக்கவேனும் இப்போதைக்குக் குருசாமியை அரஸ்ட் பண்ணி வைப்பதுதான் நல்லது.

நடராஜன் நீண்ட பெருமூச்சு விட்டார். அடுத்தடுத்து மூன்று கொலைகள் நடந்து விட்டன. எதையும் நிரூபிக்கத் தம்மால் முடியவில்லை. பம்பாயில் போலீஸ் காவலிலிருந்து தப்பிய சைக்கோ ஸாரநாதன்தான் கொடைக்கானலுக்கு வந்து இந்தக் காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறான் என்ற நம்பிக்கை வளர்வதில் அதிசயமென்ன?

இங்கிலீஷ் கிளப்புக்கு அவரும் ரங்கனும் டென்னிஸ் ஆடப் போனபோது அந்தப் பெண்மணி 'நறுக்'கென்று கேட்டாளே அதில்தான் என்ன தப்பு?

வியர்வையை டர்க்கி டவலால் துடைத்தபடி களைப்பைப் போக்கக் 'கோக்'கை அவர்கள் உறிஞ்சிக் கொண்டிருந்தபோது லுங்கி அணிந்திருந்த அந்த நவநாகரிகப் பெண்மணி வந்தாள். ''என்ன மிஸ்டர் நடராஜன்! இந்த சைக்கோவைப் பிடிச்சு உள்ளே தள்ள உங்களால் முடியலையா? இரண்டு கொலைகள் பண்ணிட்டானே?'' என்றாள்.

''இவை சைக்கோ செய்தவையில்லை மேடம்! பேட்டர்ன் மாறுபடுகிறது!''

அந்தப் பெண்மணி அவரை ஒரு துரும்பாக மதித்துப் பார்த்தாள். பணச் செருக்கும் உயர்மட்ட வாழ்க்கையும் சேர்ந்து அளித்த கர்வம் மிக்க குரலில் கூறினாள்: ''மிஸ்டர் நடராஜன்! நான் கொலைகளைப் பற்றிப் பேசறேன்;-மர்டர்! நீங்க 'பேட்டர்ன் பொருந்தலை'ங்கறீங்க. இது என்ன ஃபேஷன் பரேடா? யூ ஆர் டீலிங் வித் எ சைக்கோ!''

அப்போது நடராஜனுக்குக் கோபம் வந்தது. கண்ணியம் மிக்க மனிதர்கள் வந்து போகும் அந்த இடத்தில் ரசாபாசமாக ஏதும் நடந்துவிட வேண்டாம் என்பதால் பல்லைக் கடித்துக் கொண்டு மகனுடன் வெளியேறி விட்டார். இப்போது யோசித்துப் பார்க்கும்போது அன்று அவள் அடித்துச் சொன்னதில் குற்றமில்லை என்று பட்டது. அவளைப் போன்றவர்கள் கட்டும் வரியைத்தானே நாம் கைநீட்டிச் சம்பளமாகப் பெறுகிறோம்? தட்டிக் கேட்க அவர்களுக்கு உரிமை இருக்கிறது என்று நினைத்தார். சைக்கோ ஸாரநாதன்தான் இந்தக் கொலைகளைச் செய்கிறான் என்ற எண்ணம் மக்களிடை பரவாமல் தடுக்க நம்மால் என்ன செய்ய முடிந்தது? ஆக, அவள் மீது கோபப்பட்டுப் பயன்?

நடராஜன் என்றுமில்லாத விதமாக இன்றைக்குச் சோர்ந்து போய்விட்டார். தம்மைத் தாமே அந்தச் சோர்விலிருந்து உசுப்பி எழுப்பிக் கொண்டவராக நிமிர்ந்தார். குருசாமியை லாக்-அப்பில் தள்ள மேற்கொள்ள வேண்டிய சம்பிரதாயச் சடங்குகளைக் கவனிக்குமாறு எஸ். ஐ.க்கு உத்தரவிட்டார். இரவு நேரமாதலால் சந்திராவைத் தனியே அனுப்பாமல் தாமே என்.வி. வி. காம்ப்பில் விட்டு விட்டு ஹோட்டலுக்குத் திரும்பினார்.

**ம**றுநாள் மத்தியானத்துக்கு மேல் டி. ஐ. ஜி. நடராஜன் போலீஸ் ஸ்டேஷன் பக்கம் போய் ஏதாவது விசேஷம் உண்டா என்று விசாரித்தபோது எஸ். ஐ. செல்லப்பன் கொலைக் கேஸுக்குச் சம்பந்தப்பட்டு ஒன்றுமில்லை என்றார்.

''அப்படின்னா பரமசிவத்தின் மரணத்துக்குச் சம்பந்தப்படாத விசேஷம் இருக்கிறதாக்கும்'' என்றார் நடராஜன்.

''பெரிய காரியம் ஒன்றுமில்லீங்க. நம்ம டவுன்ஷிப்பில் சம்பளம் வாங்குகிற ஸ்வீப்பர் ஆறுமுகம் இன்னைக்குக் காலையிலே ஏரிக் கரையோரமா குப்பைகளைப் பொறுக்கிக் கூடையில் நிரப்பிக்

# தைமெட் 10-ஜி உங்கள் நெற்பயிருக்கு இடையறாத, நீண்டகால, சக்திமிக்க முவ்வழிப் பாதுகாப்பைத் தருகிறது.

பயிர் ஜீவாணுவில் ஊடுருவிச் செயல் புரியும் தன்மையும், தொடுநஞ்சாகவும், புகைநஞ்சாகவும் செயலாற்றும் தன்மையும் ஒப்பற்ற முறையில் ஒருங்கே இணையப்பெற்ற **தைமெட் 10-ஜி**, அணுகுவதற்குக் கடினமான புழு பூச்சிகளைக் கட்டுப்படுத்துவதுடன், புழுபூச்சிகள் தாக்கத்தொடங்குவதற்கு முன்பே அவற்றிற்கு எதிராக பயிர்களுக்கு உள்ளமைந்த சக்திமிக்க பாதுகாப்பைத் தருகிறது.

தவிர, **தைமெட் 10-ஜி** முழுவளர்ச்சியடைந்த பயிர்களில் கெடுதலான விளைவு எதையும் தோற்றுவிப்பதில்லை; அதன் நீண்டகால கட்டுப்பாடு மற்றும் சீதோஷ்ண நிலைமைகளினால் பாதிக்கப்படாத தன்மையின் காரணமாக, **தைமெட் 10-ஜியின்** ஒரு பிரயோகம், வழக்கமான பூச்சிக் கொல்லிகளின் பல தெளிப்புகளை விடச் சக்திமிக்க பயனைத் தருகிறது. லாபத்தில் நாட்டமுடைய பயிர்செய்பவர்களுக்கு, அதிக விளைச்சல், அதிக லாபங்கள், பத்திரத்தன்மை மற்றும் திறன்மிக்க பயிர்ப் பாதுகாப்பை உறுதிசெய்கிறது.




**விவசாயப் பிரிவு,**
**சயனமைட் இந்தியா லிமிடெட்**
த.பெ. எண் 9109, பம்பாய்-25.

CYANAMID

SISTA'S-CIL-385 TM

கிட்டிருக்கும்போது ஒரு பர்சைக் கண்டெடுத்திருக்கிறான். அதை நேரே இங்கே கொண்டு தந்திருக்கணும் அவன். அது டால் அடிக்கிறதைப் பார்த்து ஆசைப்பட்டுட்டான். காசாக்க நினைச்சுச் சாந்தி ஜுவல்லர்ஸ் அம்பலவாணன் செட்டியாரிடம் கொண்டு போய்க் காட்டியிருக்கான். அவர் 'இதன் மதிப்பை உடனே சொல்றதுக்கில்லே. நாளைக்கு வா! பார்த்துப் பணம் தரேன்'னு சொல்லி அவனை அனுப்பிச்சுட்டார். பிறகு நேரே என்னிடம் வந்தார். 'பெரிய வைரம்; இரண்டாயிரம் ரூபாய்க்குக் குறையாது. அதைக் கட்டியிருக்கிற தங்கத்தின் மதிப்பு வேறே இருக்கு'ன்னு கணக்கா என்னிடம் ஒப்படைச்சுட்டுப் போயிட்டார். ரசீது கொடுத்து வாங்கி வைச்சிருக்கேன்'' என்று கூறி முடித்த இன்ஸ்பெக்டர் செல்லப்பன், அதை எடுத்து வந்து காட்டினார்.

சற்று நேரம் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்த நடராஜன், ''இதைத் தொலைத்து விட்டவர்கள் இதுவரை வந்து ரிப்போர்ட் பண்ணலைன்னு சொல்றீங்க?'' என்று வினவினார்.

''வருவாங்க, வருவாங்க. இதெல்லாம் இங்கே சகஜம். பர்ஸ், பேனா, தோடு, ரிஸ்ட்வாட்ச் எல்லாம் தொலைச்சுட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவங்க இந்த ஸீஸன் டயத்திலே ரொம்ப அதிகம். நீங்க இது பற்றி கவலைப்பட வேண்டாம். ஆறுமுகத்தைக்கூட நான் கூப்பிட்டுக் கண்டிச்சுட்டேன். நல்ல ஆளுதான். ஏதோ அந்த விநாடியிலே கொஞ்சம் மனசு அலைபாய்ஞ்சிருக்கு. தொலையறான்னு விட்டுடுங்க.''

'' அவனைப் பற்றி நான் கவலைப்படலை செல்லப்பன் ! இது மிகவும் விலை உயர்ந்த வைரம். காணோம் என்றதும் நியாயமாகப் பதறி அடிச்சுக்கிட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடி வந்திருக்கணும். இதைத் தொலைச்சவங்க. ஏதோ காரணமாகத்தான்.... பயந்து, தயங்கி வராதிருக்காங்க.... அந்தப் பெண் சந்திரா பாக்கெட்டில் நூறு ரூபாய் நோட்டுக்களாக வைத்திருந்தாள் என்று குருசாமி சொன்னாரில்லையா ? பணக்கார வீட்டுப் பெண்....''

'' இந்த பர்ஸ் அவளுடையதாக இருக்கலாம்னு நினைக்கறீங்களா? இது தொலைந்து போனதை அவள் ஏன் தெரியப்படுத்தலை நமக்கு?''

''கூப்பிட்டு விசாரிச்சால் அது புரிஞ்சு போகுது. நீங்க போய் அவளைக் கையோடு அழைச்சுக்கிட்டு வாங்க, மறுபடியும்'' என்று உத்தரவிட்டார் நடராஜன். (தொடரும்)



## சுதந்திரத் திருநாள்

இன்றுமுதல் இந்திய மக்கள் தங்கள் விதியைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ளும் விலங்கும் ஏதும் இல்லாத உரிமையைப் பெற்றுள்ளார்கள். நீண்ட நெடுங்காலத்து ஆசை நிறைவேறுவதற்காக எதிர்நின்று போராடி வெற்றி தேடித் தந்த பலருக்கும் இத்தருணத்தில் நாம் மௌன அஞ்சலி செலுத்துவோமாக. தங்கள் உழைப்புக்கும் முயற்சிக்கும் கிட்டியுள்ள பலனைப் பூரணவுடனுடன் கண்டு களிக்கும் வாய்ப்பை இழந்தபோதிலும் அவர்களுக்கு இதில் பெரும் பங்கு உண்டு.

ஏகாதிபத்திய எதேச்சாதிகாரம், அந்நியர் ஆட்சி ஆகியவற்றை எதிர்த்து நாம் தொடுத்திருந்த போர் முடிந்து விட்டது. ஆனால் நிர்மாண வேலை மலையளவு மகத்துவம் வாய்ந்ததாகக் குவிந்திருக்கிறது. நாட்டின் பரந்து விரிந்துள்ள சிதைவுகளையும், மூர்க்கமான பங்காளிக் காய்ச்சலையும் எதிர்த்து முறியடித்தாக வேண்டும். சுதந்திரம் ஓர் அரிய வாய்ப்பு. பொறுப்பு உணர்ந்து தீவிரமாக உழைக்க நாம் முடிவு செய்தால், அந்த வாய்ப்பு நல்ல பலன் அளிக்கும்.

(மேற்கு வங்க கவர்னராக இருந்த போது ராஜாஜி அசெம்பிளியில் 15-8-47 அன்று ஆற்றிய சொற்பொழிவிலிருந்து.)



இனி நாட்டுப் பற்று என்னும் சொல்லுக்குப் புது உரை கொள்ள வேண்டும். பழங்காலத்தில் அது போராட்டமாக, எதிர்ப்பாகக் கருதப்பட்டு வந்தது. இப்பொழுது அது ஒரு புது வீடு கட்டுவது போன்ற கடும் உழைப்புக்கு இலக்கணமாகிவிட்டது. கல்லுக்குமேல் கல் வைத்துச் சுவர் எழுப்பும் பொறுமை வேண்டும்; ஏன், அதற்கு மேலும் வேண்டும். அதற்கு நல்ல இன்ஜினீயரின் செயற்திறன் ஒத்த ஆற்றல் தேவை. எனவே, நாம் கடுமையாக உழைக்க வேண்டும். அரசபீடமிருந்து ஆட்சியைப் பற்றுவது சுலபம். ஆனால் கடமையை உணர்ந்து செயலாற்றுவதுதான் சிரமம். (15-8-48ல் ராஜாஜி)



## சுதந்திர பாரதம்

1. 1962ல் ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் ராஷ்டிரபதி பவனத்தில் அளித்த விருந்தில் தலைவர்கள்.

2. பாத யாத்திரை மேற்கொண்டு பூமி தானப் புரட்சி செய்துவிட்ட வினோபா பவே.

3. பாரத ஜனாதிபதி டாக்டர் ஜாகீர் ஹுசைனை சர்வோதயத் தலைவர் ஜயப் பிரகாஷ் நாராயண் தம் மனைவியுடன் சந்தித்து அளவளாவியபோது.

4. அன்றைய தமிழக மந்திரிகள் ஓமந் தூர் ராமசாமி ரெட்டியார், டாக்டர் ராஜன், திரு அவிநாசிலிங்கம் செட்டியார்.

5. ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் உலக நாடுகளுக்கெல்லாம் பாரதத்தின் ஆன்மிகப் பெருமைகளைக் கொண்டு சென் றார். லண்டன் விஜயத்தின்போது எலிஸ பெத் ராணியோடு பவனி வருகிறார்.









6. டாஷ்கெண்ட்! - பாகிஸ்தான் - இந்திய ஒற்றுமைக்குப் பாடுபட்ட ரஷ்யத் தலைவர் கோஸிஜினோடு பாரதப் பிரதமர் லால் பகதூரும், பாகிஸ்தான் அதிபர் அயூப் கானும்.











நாடு விடுதலை பெற்ற பின் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் எத்தனையோ முக்கிய நிகழ்ச்சிகள். சிலவற்றை இங்கு காண்கிறோம்.

1. தொழில் வளம் பெருக்க பாரத அரசு முனைந்தது. நெய்வேலியில் நடப்பனவற்றை நன்கு காண இரும்புக் கிராதியில் ஏறி நிற்கிறார் பாரத பிரதமர் நேரு. கைகொடுத்து உதவுகிறார் காமராஜர்.

2. சக்தி வாய்ந்த எதிர்க் கட்சியாக சுதந்திரக் கட்சியை நிறுவி ராஜாஜி தனி நபர் சுதந்திரத்துக்காக அல்லும் பகலும் பாடுபட்டு வருகிறார். முந்நாள் தலைவர் மசானியுடனும் இன்றைய தலைவர் பிலு மோடியுடனும் ராஜாஜி.

3. ஹைதராபாத்தில் ரஜாக்கர் அட்டூழியத்தை அடக்க போலீஸ் நடவடிக்கை எடுத்தார் கவர்னர் ஜெனரல் ராஜாஜி. அதையொட்டி லெப்டினண்ட் ஜெனரல் ராஜேந்திர சிங்ஜியுடன் உரையாடுகிறார்.

4. அணு ஆயுத ஒழிப்புக்காகக் காந்தி அமைதிக் கழகத் தலைவராக அயல் நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டார் ராஜாஜி. வெள்ளை மாளிகையில் அமெரிக்க ஜனாதிபதி கென்னடி தலை சாய்த்துப் பெருந் தலைவர் ராஜாஜி கூறுவதைக் கேட்கிறார்.

5. வங்க தேச விடுதலைப் போரில் மாபெரும் வெற்றி பெற்ற முப்படைத் தலைவர்களை இந்திய பாதுகாப்பு மந்திரி ஜகஜீவன்ராம் பாராட்டுகிறார்.

6. சீனப் படையெடுப்பு நமக்கு அதிர்ச்சி அளித்ததுடன் விழிப்பையும் தந்தது. இமாலயப் பகுதியில் எல்லைப்புறத்தைக் கண் இமைக்காது காக்கும் இந்திய வீரர்கள்.





# அருள் வேட்டல்

திருலோக சீதாராம்



வானில் இருளின் வயிற்றைக் கிழித்த
வான்முனை இந்த வையம் செகுத்தது
பாரதர் வாழ்விற் படிந்த கறையும்
பனிச்சென விலகிப் பாரகம் வியந்தது
பரிவுகள் காட்டிப் பாக்கிஸ் தானம்
பகிர்ந்து கொடுத்துப் பாரத நாட்டின்
பதாகை உயர்ந்து பட்டொளி வீசிப்
பறந்திட சபர்மதிப் பாட்டன் கரத்தில்
ஆடிய ராட்டை அசோகச் சக்கரம்
பட்டேல் நேருவும் பாபு பிரசாதும்
ராஜ ரிஷியும் மௌலா னாவும்
இணையபல் மேலோர் இந்திய மண்ணின்
விடுதலை வாழ்வின் விதி வகுத்தார்.

விட்டுச் சென்ற வேற்றவர் சூழ்ந்து
விதைத்த கொடுமையின் விளைவை மாற்றிப்
பற்பல மணிமுடி பக்குவத் தொகுப்பில்
நவபா ரதமாய் நலம்பெறு வாழ்வின்
இலட்சியம் நோக்கி இட்டடி பெயர்த்து
இன்றுடன் கணக்கு இரண்டரைக் காவதம்.

ஓய்ந்து கிடந்த உறக்கம் கலைந்து
ஒருமைப் பாட்டின் உன்னதம் எண்ணி
மலைவளம் காத்து மண்ணைக் கிண்டி
மற்றும் நதியின் மடைகள் திருப்பி
இயந்திரச் சாலைகள் எண்ணில வாக்கிப்
பல்கலை வளரும் பாங்கினில்- கல்விச்
சாலைகள் பற்பல சமைத்தும் மக்கள்
வாழ்வில் வளத்தைப் பெருக்கும் வகைபல
திட்டங்க ளிட்டுத் திரும்பிப் பார்க்க—
சிற்றில் சிதைத்துச் செல்லும் அலையாய்
ஆயிரம் தொல்லை அவதிகள் எல்லை
இல்லாதனவாய் இடருறச் செய்யும்

25




மொழியின் பெயரால் மூண்டன பிணக்கு
சாதியின் பெயரால் சழக்குகள் உண்டு
உழவர் உடைமைகள் ஒன்று நூறுகும்
உறுதொழில் புரிய உபாதைகள் நிறையும்
பர்மிட் லைசென்ஸ் பற்பல வாகும்
மன்னர்கள் மணிமுடி இழந்தன ரேனும்
புழக்கடை வழியாய்ப் புப்புதுச் செல்வர்
கன்னுக்கு விட்ட தென்னையும் பனையும்
காந்தியை நினைத்துக் கண்ணீர் சொட்டும்
பதவி வேட்டைப் படுகள 'மாகும்
சட்டைகள் மாற்றும் சதுரர்கள் மலிந்தார்
மக்கள் தொகையோ மடங்குபல் லாயிரம்

இப்படி இன்னும் எண்ணில இன்னல்
இந்திய சுதந்திரச் சிற்றில் சிதைக்கும்
ஆயினும்
உன்னத லட்சியம் ஓங்கும் வெளிச்சம்
கலங்கரை விளக்கம் காண்போம் நமது
சுதந்திரக் கப்பல் சுடரும் ஒளியில்
இன்னல் கடந்து இன்பநல் வாழ்வில்
பாரத மக்களைப் பதமுறச் சேர்க்கும்
பண்டையோர் செய்த பற்பல தியாகம்
சுயநல மற்ற சுத்த சமத்துவ
நந்நிலை நோக்கி நாம் நடைபயில
அண்ணல் காந்தியின் அருள்கை கொடுக்கும்
மக்களுக் காக மக்களின் ஆட்சி
மக்களின் உண்மைத் தொண்டர்கள் புரியும்
பரிவும் பண்பும் பாராள் வலிமையும்
சேர்ந்திடும் என்று சிந்தையில் சுதந்திர
தேவியின் அருளைத் தினமும்
வணங் கிநாமின்று வரம்கிடப் போமே!

ஒரு பஜனைப் பாட்டை முணுமுணுத்துக் கொண்டே நுழைந்தார் இருதய பாபு. தொப்பியை ஆணியில் மாட்டி விட்டு நாற்காலியில் சௌகரியமாய் உட்கார்ந்து கொண்டு ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். என் பக்கம் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டே சொன்னார்: ''என்ன, மலயபாபு! ரொம்பச் சிக்கலான பிரச்னையில் ஆழ்ந்திருக்கிறீர்கள் போல் தோன்றுகிறதே! அது என்ன டிபரன்ஷியல் கால்குலஸா, அல்லது ரிலேடிவிடி தியரியா?''

''அவற்றை யெல்லாம் விடச் சிக்கலான பிரச்னை'' என்று பதில் சொன்னேன்.

''அப்படி யென்றால்?''

''தகவல் வந்திருக்கிறது. முகமது மலைக்குப் போக மாட்டாராம்; ஆகையால் மலை முகமதிடம் வருகிறதாம்!''

''என்ன புதிர் போடுகிறீர்களே!''

''கைரேகை வழக்கு — அதுதான் கைதி பூபேஷ் சென்னின் வழக்கு — ஜெயிலிலேயே நடக்கப் போகிறதாம். அதற்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லி எஸ். டி. ஓ. உத்தரவு அனுப்பி யிருக்கிறார்.''

''இதில் சிக்கல் என்ன இருக்கிறது?''

''யோசித்துப் பாருங்கள்! குற்றஞ் சாட்டப் பட்டவன் பகிரங்கமாகக் கோர்ட்டில் விசாரிக்கப்படும் உரிமையை இழந்து விட்டான்!''... 



...டுள்ள குற்றத்தை மறுக்க எல்லா உதவிகளும் அளிக்கப்பட வேண்டும். இதெல்லாம் ஜெயிலுக்குள்ளே எப்படிச் சாத்தியப்படும், நீங்கள் சொல்லுங்கள்!''

இருதய பாபு சுற்றுமுற்றும் ஒரு தடவை பார்த்துவிட்டுத் தணிந்த குரலில், சொன்னார்: ''இன்று ஆகட்டும், நாளை ஆகட்டும், என்றாவது ஒரு நாள் இங்கிலீஷ்காரன் மூட்டை கட்டிக் கொண்டு இங்கிருந்து போகத்தான் வேண்டும். அதற்குப் பிறகும் நான் உயிருடன் இருந்தால் எனக்கு நிச்சயம் பென்ஷன் கிடைக்காது. ஆனால் வயிற்றுக்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டுமே! ஆகையால் ஒரு சரித்திரப் பாட புத்தகம் எழுதுவதென்று தீர்மானித்திருக்கிறேன். அதில் ஓர் அத்தியாயம் — 'இந்தியாவில் ஆங்கில ஆட்சியின் வீழ்ச்சிக்குக் காரணம்'. அந்தக் காரணம் என்ன தெரியுமா? ஆங்கிலமொழிதான். ஆங்கிலேயர்களைக் குப்புறத் தள்ளியது அவர்களது மொழியேதான்! என்ன, நான் சொல்வது புரிகிறதா?''

''இல்லை.''

''நீங்களே யோசித்துப் பாருங்கள். 1857ம் வருஷத்துக்குப் பிறகு பிரிட்டிஷ் ஆட்சியின் அஸ்திவாரம் பலப்பட்டபோது ஆங்கிலேயர்கள் எந்த நோக்கத்துடன் அவர்களுடைய மொழியை இங்கே பரப்பினார்கள்? தங்கள் ஆதிக்கத்தை நிலைநிறுத்திக்கொள்வதற்காக! ஆங்கிலம் மூளைக்குள் இறங்க இறங்கச் சுதேசிகளுக்கு ராஜ பக்தி வளரும், நிர்வாகத்துக்குத் தேவையான சுதேசி குமாஸ்தாக்கள் தட்டில்லாமல் கிடைப்பார்கள் என்று அவர்கள் நினைத்தார்கள். அவர்கள் எதிர்பார்த்தபடி குமாஸ்தாக்கள் கிடைத்...

# ஒரு சாம்ராஜ்யத்தின்

வங்காளி மூலம்: ஸ்ரீஜராஸந்த்

''நீங்கள் ஒரு விஷயத்தை மறந்துவிடுகிறீர்கள், மலய பாபு! அதன் பெயர் நிர்வாகத் தேவை!''

''அதுதான் என்னுடைய ஆட்சேபம். நிர்வாகத்தின் தேவை நீதி முறைக்கான விதிகளைப் புறக்கணித்து விட்டால் நீதியின் மதிப்பு என்ன ஆகும்? நிர்வாகத் தேவைக்கு முன் நீதி பணியலாமா?''

''நீங்கள் ரொம்ப அதிகமாகச் சிந்திக்கிறீர்கள், மலய பாபு!'' என்று சொல்லிச் சிரித்தார் இருதய பாபு.

''நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். வழக்கு முடிந்து தீர்ப்பு அளிக்கப்படும்வரை குற்றம் சாட்டப்பட்டவன் நிரபராதி என்பதுதான் பிரிட்டிஷ் சட்டத்தின் அடிப்படைக் கொள்கை. குற்றத்தை நிரூபிப்பது குற்றம் சாட்டுபவனின் கடமை. குற்றம் சாட்டப்பட்டவனுக்குத் தன்னை நிரபராதி என்று நிரூபிக்க வேண்டிய பொறுப்பு இல்லை. அவனுக்குத் தன்மேல் சாட்டப்பட்...

...தார்கள்தான். ஆனால் அவர்கள் எதிர்பாராத இன்னொரு விளைவும் ஏற்பட்டது. பள்ளிக்கூடத் தொழிற்சாலைகளிலிருந்து குமாஸ்தாப் பட்டாளங்கள் மட்டும் வெளிவரவில்லை, கூடவே வேறொரு ரக மனிதர்களும் வந்தார்கள். இவர்கள் பள்ளிக்கூடங்களில் அளந்து கொடுக்கப்பட்ட அறிவோடு திருப்தியடையாமல் மேலைநாட்டு அறிவு முழுவதையும் கரைத்துக் குடித்தார்கள். இவர்களால்தான் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஆட்டம் காண ஆரம்பித்திருக்கிறது. இவர்கள்தான் கோகலே, திலகர், காந்தி, நேரு, சுபாஷ், பட்டேல் முதலியோர். பழங்காலப் பாடசாலைகள் இத்தகைய மனிதர்களை ஒருபோதும் தயார் செய்திருக்க முடியாது!''

தம் பேச்சைத் தாமே ரசித்தவராக இருதய பாபு ஹோ ஹோ வென்று சிரித்தார்.

சூபரின்டெண்டெண்டின் அறையில் கோர்ட் கூடியது. ஜட்ஜ் இங்கிலாந்திலிருந்து



# அஸ்தமனம்

தமிழாக்கம்: சு. கிருஷ்ணமூர்த்தி

அண்மையில் வந்தவர். அவர் வகித்த பதவி எஸ். டி.ஓ. (சப் டிவிஷனல் ஆபீஸர்.)

பூபேஷ் சென் தேசிய இயக்கத்தின் காரணமாகச் சிறையில் இருந்தான். ஆனால் போலீசார் சந்தேகித்தார்கள், அவன் உண்மையில் ஒரு கேடி, தேசிய இயக்கம் ஒரு வேஷம்தான் என்று. ஆகையால் அவனுடைய கை ரேகைகளைப் பதிவு செய்யும்படி அதிகார வர்க்கம் உத்தரவிட்டது. பூபேஷ் சென் பதிவு செய்து கொள்ள மறுத்தான். அதன் விளைவுதான் இந்த வழக்கு.

ஜட்ஜ் கொஞ்சம் கொஞ்சம் வங்காளி கற்றிருந்தார். அவர் அரை குறை வங்காளியில் பூபேஷ் சென்னைக் கேட்டார்: "நீ கைரேகை வைக்க மறுக்கிறாயா?"

அவன் பதில் சொல்லவில்லை.

ஜட்ஜ் குரலை உயர்த்தினார்: "பதில் சொல்!"

இப்போதும் பதில் இல்லை.

"நான் கவனிக்கிறேன், யுவர் ஆனர்!" என்று இன்ஸ்பெக்டர் அவரிடம் சொல்லிவிட்டு பூபேஷைக் கேட்டார், "என்ன ஐயா! ஜட்ஜ் சாகேப் சொல்வது உம் காதில் விழவில்லையா?"

பூபேஷ் ஆங்கிலத்தில் பதில் சொன்னான்: "நன்றாக விழுகிறது. கண்ணியமான மனிதர்களிடமிருந்து பதில் பெற வேண்டுமென்றால் கேள்வியை மரியாதையாகக் கேட்க வேண்டும் என்பதை உங்கள் ஜட்ஜ் சாகேபுக்குச் சொல்லிக் கொடுங்கள்!"

"என்ன!" எகிறிக் குதித்தார் ஜட்ஜ். இப்போது ஆங்கிலத்தில் கேட்டார். "கைரேகை வைப்பாயா, மாட்டாயா?"

"மாட்டேன்!"

"மறுத்தால் கடுந் தண்டனை கிடைக்கும்!"

பூபேஷ் இளக்காரமாகச் சிரித்தவாறே பதில் சொன்னான்: "வீண் ஆர்ப்பாட்டம் வேண்டாம்! எதைக் கொடுக்க விருப்பமோ அதை உடனே கொடுத்து விடலாமே!"

விவாதம் இன்னும் சற்று நேரம் தொடர்ந்தது. ஜட்ஜ் ஐ. ஸி. எஸ்.காரர். அதிலும் புதிதாக வந்தவர். கறுப்பனின் அதிகப்பிர

சங்கித்தனத்தைப் பொறுத்துக் கொள்ள இன்னும் பழகவில்லை அவர்.

அவர் திடீரென்று உத்தரவு கொடுத்தார்: ''பலவந்தமாகக் கைரேகை எடுங்கள்!''

இன்ஸ்பெக்டர் தயங்கினார். பலவந்தமாகக் கைரேகை எடுப்பது சரியா யிருந்தால் அவர் அதை முன்னமே செய்திருப்பாரே! இந்த வழக்கே தேவைப்பட்டிருக்காதே!

பொறுமை இழந்த ஜட்ஜ் போலீஸ்காரர்களுக்கு உத்தரவிட்டார்: ''அவனைப் பிடித்துக்கொள்ளுங்கள்!''

போலீஸ்காரர்கள் பூபேஷைப் பிடித்துக் கொண்டார்கள். ஆனால் அவன் ஒரே உதறலில் தன்னை விடுவித்துக் கொண்டு கத்தினான்: ''வந்தே மாதரம்!''

''வாயை மூடு! ராஸ்கல்!'' என்று ஜட்ஜ் கர்ஜித்தார்.

பூபேஷ் இன்னும் உரக்கக் கத்தினான், ''மகாத்மா காந்திக்கு ஜே!''

அதன் எதிரொலியாக ஜெயிலுக்குள்ளேயிருந்து பல குரல்களின் ஒருமித்த கோஷம் கேட்டது — ''மகாத்மா காந்திக்கு ஜே!''

ஜட்ஜின் கண்கள் ரத்தமாய்ச் சிவந்தன. அவர் பற்களைக் கடித்துக் கொண்டு பூபேஷை உறுத்துப் பார்த்தார். மறு கணம் அவர் பார்வை மேஜையின் மேலிருந்த சவுக்கின் மேல் விழுந்தது. உடனே அவர் அதை எடுத்து ஆத்திரத்துடன் பூபேஷின் தலையில் அடித்தார். கீழே விழுந்த பூபேஷ் தலையை இரண்டு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டு தன் பலம் கொண்ட மட்டும் கத்தினான்: ''மகாத்மா காந்திக்கு ஜே!''

முப்பது முழ தூரத்திலிருந்தது ஜெயில் கதவு. செய்தி அங்கு போய்ச் சேருவதற்கு முப்பது விநாடிகள்தான் பிடித்தன. கதவுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த அரசியல் கைதிகள் பொங்கி எழுந்தார்கள். அவர்களைச் சமாளிக்க முடியாமல் திணறிப்போன காவல்காரன் எச்சரிக்கை மணியை அடித்துவிட்டான். ஜெயிலர் வீட்டிலிருந்து ஓடி வந்தார். அவருடைய சிப்பந்திகளான நாங்களும் ஓடி வந்தோம். காவற்காரர்கள் துப்பாக்கிகளுடன் உள்ளே நுழைந்தார்கள். வழியில் வரிசையாக அரசியல் கைதிகள் உட்கார்ந்திருந்தார்கள். 'வந்தே மாதரம்' கோஷம் நின்று விட்டது. ஆனால் எல்லோர் முகத்திலும் ஒரு பரபரப்புக் காணப்பட்டது.

ஜெய்லர் அவர்களில் ஒருவரைக் கேட்டார்: ''என்ன நடந்தது?''

ஆவேசம் நிறைந்த குரலில் பதில் வந்தது: ''நீங்களே பாருங்களேன், என்ன நடந்ததென்று! அங்கேதான் ஓர் ஆளை சம்ஹாரம் செய்து விட்டீர்கள்! எங்களையும் சுட்டுத் தள்ளுங்களேன்!''

ஜெய்லர் திடுக்கிட்டார். காவற்காரர்களை வெளியே அனுப்பி விட்டு எங்களுடன் ஆபீசுக்கு ஓடினார். அங்கே கோர்ட்டின் அடையாளத்தையே காணோம். ஜட்ஜ், போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் எல்லோரும் மாயமாய் மறைந்து விட்டார்கள். பூமியில் நினைவிழந்து கிடந்தான் பூபேஷ் சென். அவன் தலையிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. ஜெயில் சிப்பந்திகள் சிலர் அவனைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள்.

நடந்தது நடந்து விட்டது. அதைப் பற்றி ரிப்போர்ட் அனுப்புவது எங்கள் வேலை. ஜட்ஜின் நடத்தையைப் பலமாகக் கண்டிக்கும் முறையில், அதே சமயம் வெள்ளைக்கார அதிகார வர்க்கத்தின் கோபத்துக்கு இலக்காகாமல் ரிப்போர்ட் எழுதப்பட வேண்டும். அனுபவமில்லாத சூப்பரின்டெண்டு ரிப்போர்ட்டைக் காரசாரமாக எழுதத் துடித்தார். அவர் சேனையில் கேப்டன் பதவி வகித்தவர். ஜெயிலின் கௌரவம் பற்றிப் பிடிவாதமான கொள்கைகளுடையவர். வயதிலும் அனுபவத்திலும் மூத்த ஜெய்லரோ அதிகார வர்க்கத்துக்கு ஆத்திரமூட்டாத வகையில் ஒரு 'வழவழா' ரிப்போர்ட் அனுப்ப விரும்பினார். இவ்விரண்டு கருத்துக்களுக்கிடையே ஊசலாடியவாறு ரிப்போர்ட் உருவாகிக் கொண்டிருந்தது.

அப்போது சூபரின்டெண்டுக்கு ஓர் அவசரக் கடிதம் வந்தது. ஜட்ஜ்தான் எழுதியிருந்தார் — ''ஒரு பயங்கரக் குற்றவாளியை அடக்குவதற்காகக் கோர்ட்டில் சற்று பலப் பிரயோகம் செய்ய நேர்ந்து விட்டது. ஜெயில் ஆபீசில் இந்நிகழ்ச்சி நடந்தது பற்றி மிகவும் வருந்துகிறேன். அது பற்றித் தங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன்.''

கேப்டன் கடிதத்தைப் படித்து விட்டு ஜெய்லரிடம் கொடுத்தவாறே சொன்னார்: ''இந்த ஆள் இன்னமும் சிறு பையனாகவே இருக்கிறான். கொஞ்சமும் அனுபவமில்லை இவனுக்கு. இக்கடிதம் மூலம் தனக்குத் தானே ஆபத்தைத் தேடிக் கொண்டிருக்கிறான் பாருங்கள்!''

ஜட்ஜ் செய்த குற்றத்தை அவரே ஒப்புக் கொண்டு விட்டாரல்லவா? இதைக் கொண்டே அவரை மடக்கி விடலாம்!...

கேப்டன் கடிதத்தை எடுத்துக் கொண்டு ஜட்ஜின் மேலதிகாரியான ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் சென்றார். அவரும் வெள்ளைக்கார ஐ. ஸி. எஸ்.தான். ஆனால் அவருக்கும் எஸ். டி. ஓ.வுக்கு மிடையே வேற்றுமை இருந்தது. ஜில்லா மாஜிஸ்டிரேட் அனுபவத்தில் பழுத்த பழம். அதிகம் பேசமாட்டார். ஆனால் காரியத்தில் சூரப்புலி. அவர் கேப்டனிடமிருந்து கடிதத்தை வாங்கித் தம் பையில் போட்டுக் கொண்டு நயம் கலந்த குரலில் சொன்னார்: ''நீங்கள் இவ்வளவு சிரமப்பட்டு வந்ததற்காக உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த வருந்தத்தக்க சம்பவத்தைக் குறித்து இனி நீங்கள் கவலைப்பட வேண்டாம். அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள்!''

அந்தப் பேச்சின் குறிப்பைக் கேப்டன் உணர்ந்து கொண்டார். இனி இந்த விஷயத்தில் அவர் தலையிட வேண்டாம் என்பதுதான் அந்தக் குறிப்பு. மனத்துக்குள் மறுகியவாறே வெளியேறினார் கேப்டன்.

நிகழ்ச்சி பற்றிய விசாரணை விரைவிலேயே நடந்தது. விசாரணை நடத்தியவர்கள் இருவர். ஒருவர் ஜில்லா மாஜிஸ்டிரேட், மற்றவர் ஜெயில் இலாகாத் தலைவர் வெள்ளைக்கார ஐ. எம். எஸ்.

முதலில் வைத்தியர்களின் ரிப்போர்ட்டுகள் ஆராயப்பட்டன. இரண்டு ரிப்போர்ட்டுகள் இருந்தன. ஒன்று ஜெயில் டாக்டருடை



# வண்ணங்களும் வகைகளும் பலப் பல
# ஆனால் தரம் ஒன்றேதான்: உயர்தரம்!

## அதுவே 'பாரிவேர்'

தரத்தை விரும்புவோர் பாரிவேரை நாடுவதற்கு இதுதான் காரணம்.
வழவழப்புடன் கூடிய பளபளப்பு கொண்டது. நீரை உறிஞ்சாதது. விரிசல் விழாதது.
முற்றிலும் சுகாதாரமானது. முத்துப் போன்ற வெண்ணிறம், மற்றும் பிங்க்,
பிரிம்ரோஸ், டர்க்காயிஸ், ஸ்கைப்ளூ, மெல்லோ கிரீன்,
மிஸ்ட் கிரே ஆகிய நிறங்களில் கிடைக்கிறது.

**Parryware VITREOUS**

பொலிவான வாழ்க்கைக்கு
— பாரிவேர் விட்ரியஸ்

ஐ.எஸ்.ஐ. மற்றும் டி.ஜீ.எஸ். அண்ட் டி. பட்டியல்களில் இடம் பெற்றிருப்பது

ஈ.ஐ.டி. - பாரி லிமிடெட்
ராயல் டெளல்டன், யு.கே.யின் தொழில்நுட்ப ஆலோசனை கொண்டது
டேர் ஹவுஸ், சென்னை-1

இந்தியாவின் மிகப் பெரிய செராமிக் தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டு, அகில உலகப் புகழ் பெற்றது

டிசைன் இன்டெக்ஸுக்கான யு.கே. கவுன்சில் ஆஃப் இண்டஸ்ட்ரியல் டிசைன் நிறுவனத்தின் பட்டியலில் இடம் பெற்றிருப்பது

FDSPW 133 BTH

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான, கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3




இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

## நிரோத்

லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான
கருத்தடைச் சாதனம் நிரோத்.

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகி

யது; மற்றது மகா கனம்பொருந்திய ஐ.எம்.எஸ். சிவில் சர்ஜனுடையது. அவர்களுடைய பதவிகள் வேறுபட்டிருந்தது போலவே ரிப்போர்ட்டுகளும் வேறுபட்டிருந்தன.

ஜெயில் டாக்டர் எழுதியிருந்தார்: காயத்தின் அளவு மூன்றங்குல நீளம், ஓரங்குல ஆழம்; தடி அல்லது அது போன்ற கடினமான வஸ்துவால் தாக்கப்பட்டதால் ஏற்பட்டிருக்கலாம்.

சிவில் சர்ஜன் எழுதியிருந்தார்: காயம் ஓர் அங்குல நீளம், கால் அங்குல ஆழம். கடின வஸ்து ஒன்றின் மேல் விழுந்ததால் ஏற்பட்டிருக்கலாம்.

ஜெயில் டாக்டர் அழைக்கப்பட்டார். அதிகாரிகள் அவரிடம் இரண்டு ரிப்போர்ட்டுகளையும் கொடுத்து, "நீங்கள் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?" என்று கேட்டார்கள்.

ஜெயில் டாக்டர் சொன்னார், "ஒன்றுமில்லை."

மாஜிஸ்டிரேட் பேசினார். "நீங்கள் 24ந் தேதி காயத்தைப் பார்த்திருக்கிறீர்கள். சிவில் சர்ஜன் 25ந் தேதி பரிசோதித்திருக்கிறார். காயம் ஒரே நாளில் சொஸ்தமாகியிருக்க முடியுமா? என்ன சொல்கிறீர்கள்?"

"நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை" என்று பதில் வந்தது.

ஜெயில் இலாகாத் தலைவர் சொன்னார்: "உங்கள் ரிப்போர்ட்டைப் பார்த்தால் ஒன்று உங்களுக்குச் சாதாரண அறிவுகூட இல்லை, அல்லது நீங்கள் ஏதோ ராஜாங்க விரோதமான உணர்ச்சிக்கு ஆட்பட்டிருக்கிறீர்கள் என்று சொல்லத் தோன்றுகிறது."

டாக்டர் மௌனம் சாதித்தார்.

சம்பவத்தை நேரில் பார்த்த இரண்டு குமாஸ்தாக்கள் இருந்தார்கள். சம்பவம் நிகழ்ந்த பிறகு அவர்களுடைய சாட்சியத்தைப் பதிவு செய்தவன் நான். நடந்ததை நடந்தபடியே தங்கள் சாட்சியத்தில் வர்ணித்திருந்தார்கள் அவர்கள். அவர்களுடைய சாட்சியத்தின் நகல் ஒன்று விசாரணையில் சமர்ப்பிக்கப்பட்டிருந்தது.

அவர்கள் அழைக்கப்பட்டார்கள். மாஜிஸ்டிரேட் கேட்டார்: "நீங்கள் என்ன படித்திருக்கிறீர்கள்?"

ஒருவன் இண்டர்மீடியட் படித்திருந்தான். மற்றவன் மெட்ரிக்.

மாஜிஸ்டிரேட் சொன்னார்: "அப்படியானால் இது உங்கள் ஸ்டேட்மெண்ட் இல்லையே!"

"எங்கள் ஸ்டேட்மெண்ட்தான் இது!" இருவரும் சொன்னார்கள்.

மாஜிஸ்டிரேட் துரை ஆச்சரியத்துடன் வினவினார். "அது எப்படி? அவ்வளவு அழகாக உங்களுக்கு இங்கிலீஷ் எழுதத் தெரியுமா?"

"இல்லை. நாங்கள் வங்காளியில் சொல்லியதை மலய பாபு ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து எழுதிக் கொண்டார்."

"அப்படிச் சொல்லுங்கள்! ஆனால் நீங்கள் சொல்லியதை மலய பாபு சரியாக மொழி பெயர்த்தாரா இல்லையா என்று உங்களுக்குத் தெரிய நியாயமில்லையே!"

குமாஸ்தாக்களிடமிருந்து பதில் இல்லை.

கடைசியில் கோர்ட் இன்ஸ்பெக்டர் ஆஜரானார். அவர் குற்றவாளியின் தோற்றம் நடந்ததை இவற்றை மிகைப்படுத்தி வருணித்துவிட்டுச் சொன்னார்: "குற்றவாளிக்கும் ஜட்ஜுக்குமிடையே வாக்கு வாதம் ஏற்பட்டது. திடீரென்று குற்றவாளி ஜட்ஜ் துரையின் மேல் பாய்ந்தான். ஜட்ஜ் தம் கைகளை விரித்து அவனைத் தடுத்தார். அவருடைய கை பட்டு அவன் அந்தப் பக்கம் விழுந்தான். அங்கே இருந்த மேஜையின் முனையில் அவன் தலை பட்டுக் காயம் ஏற்பட்டு விட்டது."

மாஜிஸ்டிரேட்டும் ஜெயில் இலாகாத் தலைவரும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டார்கள். அவர்களுடைய முகங்களில் திருப்தி நிலவியது. விசாரணைக் கமிட்டி கலைந்தது. அதன் முடிவைப் பற்றி யாருக்கும் எவ்வித ஐயமும் இல்லை.

இரண்டு துரைகளும் போன பின்பு கோர்ட் இன்ஸ்பெக்டர் அங்கிருந்து புறப்பட்டார். ஜெயிலர் அவரிடம் சொன்னார்: "என்ன அவசரம் உங்களுக்கு? இருங்கள், ஒரு கப் டீ சாப்பிட்டு விட்டுப் போகலாம்."

ஒரு குமாஸ்தா சொன்னார்: "ஆமாம் சார்! உங்களுக்கு ரொம்பச் சிரமம். கொஞ்சம் தொண்டையை நனைத்துக் கொண்டு போங்கள்."

இன்னொருவன் சொன்னான்: "ஆகா! என்ன பிரமாதமான நாடகம்! அதில் எல்லோரையும் விடச் சிறந்த நடிகர் நீங்கள் தான்! அது சரி, இவ்வளவு நடிப்புத் திற



## சுதந்திரத் திருநாள்

ஆம்; யாரும் எதிர்பாராத அதிசயந்தான் நடைபெற்றிருக்கிறது. நடக்கமுடியாது என்று பலரும் நினைத்த காரியந்தான் நிறைவேறியிருக்கிறது.

இந்த அற்புதம் நடப்பதற்கு மூலகாரணமாயிருந்து நடத்தி வைத்த மகா மந்திரவாதி யார்? சொல்லவும் வேண்டுமா? கையில் ஆயுதம் எடுக்காமல் பாரத யுத்தத்தை நடத்திவைத்த மாயக் கண்ணனைப் போல் இன்று அஹிம்சா தர்மத்தையே ஆயுதமாகக் கொண்டு வீரசுதந்திரப் போரை நடத்தி மகத்தான வெற்றியும் அளித்தவர் மகாத்மா காந்தியேதான்.

சுயநலமென்ற நினைவே இல்லாமல், பட்டம் பதவி மோகமில்லாமல் தாயின் விலங்கை முறித்தெறிய அரும்பாடுபட்ட தேசபக்தர் திருக்கூட்டத்துக்கு வணக்கம் செலுத்துவோம்.

ஒரு தேசம் சுதந்திரம் அடைவதைக் காட்டிலும், அடைந்த சுதந்திரத்தை நிரந்தரமாகக் காப்பாற்றுவதுதான் அதிகக் கடினம்.

-(ஆகஸ்ட் 15, 1947) 'கல்கி' தலையங்கத்திலிருந்து

மையை நீங்கள் இத்தனை நாட்கள் எங்கே ஒளித்து வைத்திருந்தீர்கள்?''

இவ்வளவு கேலியையும் இன்ஸ்பெக்டர் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அவர் புன்சிரிப்புடன் மயைக் குடிக்கத் தொடங்கினார். ''நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். எனக்குக் கோபம் வராது. நீங்கள் இளைஞர்கள். இளங்கன்று பயமறியாது. உங்கள் வயதில் நானும்தான் சத்தியம், ஒழுக்கம், நேர்மை என்றெல்லாம் லட்சியக் கனவுகள் கண்டு கொண்டிருந்தேன். ஆனால் பின்னால் அனுபவபூர்வமாகக் கற்றுக் கொண்டு விட்டேன், இந்தக் கொள்கைகளெல்லாம் கதர் கட்டிக் கொண்டு திரியும் சுதேசி இயக்கக்காரர்களுக்குத்தான் லாயக்கு என்று. வாழ்க்கையில் நாலு காசு சம்பாதித்து ஒரு குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் இந்த லட்சியங்களைக் கட்டிக் கொண்டு அழுதால் சரிப்பட்டு வராது. வேலையில் நுழைந்துவிட்டால் இருக்க வேண்டிய ஒரே கொள்கை பதவியில் மேலும் மேலும் உயர்வது. அதற்கு வழி மேலதிகாரியைத் திருப்தி செய்வது. நாலைந்து பொய்கள் சொல்லி நம் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடியுமானால் அதையும் செய்ய வேண்டியதுதான்! இரண்டு படகுகளில் கால்களை வைத்துக் கொண்டு பிரயாணம் செய்ய முடியாது. அப்படிச் செய்ய முயன்றால் அதள பாதாளத்தில்தான் விழுவீர்கள். அப்போது உங்கள் லட்சியங்கள் உங்களைக் காப்பாற்றாது.''

இருதய பாபுவைத் தேடிக் கொண்டு போனேன். ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருந்தார் அவர்.

''இங்கே என்ன செய்கிறீர்கள்?''

''யோசனை செய்து கொண்டிருக்கிறேன்.''

''என்ன யோசனை?''

''சரித்திரப் புத்தகத்தை இப்போதே எழுதத் தொடங்க வேண்டும் என்பது பற்றி!''

''இவ்வளவு சீக்கிரமாகவா?''

''சீக்கிரமென்ன? 'அவர்கள்' காலம் முடிந்து விட்டது. பூச்சி அரித்துவிட்ட மரம் கீழே விழ எவ்வளவு நேரமாகும்?''

''விழுந்து விடுமா? அந்த இன்ஸ்பெக்டரைப் போன்ற ராஜ விசுவாசிகள் எவ்வளவு பேர் 'அவர்களுடைய' ஆதிக்கத்தைத் தூண்கள் போலத் தாங்குகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாதா?''

''எவ்வளவு பேர்தான் தாங்கட்டுமே! வெள்ளைக்கார ஆட்சியின் இறுதிக் காலம் நெருங்கி விட்டதென்பதைத்தான் நான் என் கண் முன்னே பார்த்திருக்கிறேனே! கோழைகளின் ஆதிக்கம் நெடுங்காலம் நிலைக்காது, மலய பாபு!''

''கோழைகளா?''

''ஆமாம், கோழைகள்தான்!'' உறுதியான குரலில் பதில் வந்தது. ''சில வருடங்களுக்கு முன் நிகழ்ந்த சம்பவத்தை நினைத்துப் பாருங்கள். ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பத்தொன்பதாம் வருஷம். ஜாலியன்வாலா பாகில் அப்பாவிக் குடியானவர்கள், அபலை ஸ்திரீகள், குழந்தைகள் முதலியவர்களுடைய ரத்தம் பெருகி ஓடியது. நாம் வீட்டில் எலியை அடித்துக் கொல்வது போல 'அவர்கள்' மனிதர்களை அநுயாசமாகச் சுட்டுக் கொன்றார்கள். குண்டுகள் தீர்ந்துவிட்டதால் சுட்டுக் கொல்ல முடியாதவர்களைச் சவுக்கினால் அடித்தார்கள். லஜ்பத்ராயை வீதியில் மார்பால் ஊர்ந்து வரச் செய்தார்கள். அப்புறம் இவற்றை விசாரிக்க ஒரு கமிஷன் வந்தது. ஜெனரல் டயர் அந்தக் கமிஷனிடம் என்ன சொன்னான் தெரியுமா? தைரியமாகத் தலை நிமிர்ந்து சொன்னான்: 'ஆம், நான் அவர்களைக் கொல்லத்தான் செய்தேன்! இன்னும் குண்டுகள் இருந்திருந்தால் இன்னும் பலரைக் கொன்றிருப்பேன். இது பற்றி நான் கர்வப்படுகிறேன்!'...

''ஜெனரல் டயருக்குப் பக்க பலமாக நின்றான் ஜெனரல் ஓ டயர். அவன் சொன்னான்: 'ஜெனரல் டயர் செய்தது முற்றிலும் சரி!' இங்கிலாந்தின் பார்லிமெண்டிலும், செய்திப் பத்திரிகைகளிலும், பொதுக் கூட்டங்களிலும் 'ஜெனரல் டயர் செய்தது முற்றிலும் சரி!' என்ற கோஷமே எதிரொலித்தது. வெள்ளைக்காரன் கர்ஜித்தான்: 'இந்தியா எங்கள் ராஜ்யம்! அங்கே நாங்கள் என்ன வேண்டுமானாலும் செய்வோம்!'...

''இன்று என்ன நடக்கிறது? ஒரு சாதாரண சவுக்கடியை மறைத்து அதைப் பூசி மெழுகப் பெரிய ஐ. ஸி. எஸ்., ஐ. எம். எஸ். அதிகாரிகளின் கோஷ்டி எப்படித் திணறுகிறது! இந்தப் பெரிய மனிதர்கள் இந்த அற்பனை கோர்ட் இன்ஸ்பெக்டரைச் சிகண்டி போல் தங்களுக்கு முன்னே நிறுத்திக் கொண்டு தங்களைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்கிறார்கள்! இதெல்லாம் எதற்காக? ஒருசில சாதாரணப் பத்திரிகைக்காரர்களின் கண்டனங்களுக்குப் பயந்து! இப்போது சொல்லுங்கள், இவர்கள் கோழைகளல்லவா?''

எப்போதும் சிரிக்கச் சிரிக்கப் பேசும் இருதய பாபுவின் குரலில் அப்போது தொனித்த அருவருப்பை நான் அதற்கு முன் ஒருபோதும் கேட்டதில்லை. நான் வியப்புடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

இருதய பாபு தொடர்ந்தார்: ''பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஒரு நாள் இந்த அதிகாரிகளைத்தான் 'ஸ்டீல் பிரேம்' — 'எஃகுச் சட்டம்' — என்று குறிப்பிட்டார். அந்த எஃகுச் சட்டத்தில் முன்பு இருந்த வலு இல்லை. அது இப்போது உளுத்த மரமாக ஆகிவிட்டது. பிரிட்டிஷ் இனத்தின் முதுகெலும்பு வளைந்துபோய் விட்டது. அதற்கு சாம்ராஜ்யத்தின் பாரத்தைத் தாங்கிக்கொள்ளத் திராணி இல்லை.

''அதனால்தான் சொல்லுகிறேன், உடனே பாடப் புத்தகம் எழுதத் தொடங்க வேண்டியதுதான்!... நீங்கள் எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும், மலய பாபு!''

''என்ன உதவி?''

''உங்கள் நண்பர்களில் யாராவது சர்வ கலாசாலையில் பெரும் புள்ளிகளாய் இருப்பார்களே! அவர்களிடம் எனக்காக ஒரு வார்த்தை சொன்னால் எனக்கு மிகவும் உபகாரமாக இருக்கும். நான் எழுதும் புத்தகத்தைப் பாடத் திட்டத்தில் சேர்த்துக்கொள்வார்கள்.... என்ன சொல்கிறீர்கள்?''

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31.
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

## BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

மகிழ்ச்சியான சந்தர்ப்பங்களுக்கு...மொனேகோ!

# பிஸ்கட் ஒன்று-ருசித்துச் சாப்பிடும் விதம் இரண்டு



அப்படியே சாப்பிட மிகவும் அருமையானவை
மனதிற்கு உகந்த பொருள்களை
இட்டு சாப்பிடவும் மிகப்பிரமாதமானவை

மொனேகோ—கரகரப்புமிக்க உப்பு பிஸ்கட்
எந்நேரத்திலும், எந்த சந்தர்ப்பத்திலும்
சாப்பிடக் கூடியவை. தாமதம் ஏன்,
இப்பொழுதே மொனேகோ வாங்கி,
இன்பமுடன் சாப்பிடுங்களேன்!

**பார்லே மொனேகோ**

இந்தியாவின் மிக அதிகமாக
விற்பனையாகும் உப்பு பிஸ்கட்டுகள்







everest/257b/PP tam